


# மேகி கிளப் பரிசுகள், இலவசம். வனவிலங்குகளுடன் பெறுவீர், உல்லாசம்!


மேகி "ஆபரேஷன் வைல்ட்லைஃப்" விளையாட்டில் வன விலங்குகளைக் காப்பாற்றுங்கள்!



மேகி "கிங் ஆஃப் தி ஜங்கிள் கேம்" விளையாட்டில் வனத்தை வெல்லுங்கள்!

குழந்தைதளே! மேகி கிளப்பில் சேருங்கள். வருடம் பூராவும் கொண்டாட்டம் பெறுங்கள். நியூஸ் லெட்டர்கள், பரிசுகள், விளையாட்டுகள் இன்னும் நீங்கள் செய்வதற்கு எத்தனை எத்தனயோ!

இந்த சின்னத்தை மேகி நூடுல்ஸ் 5 காலி உறைகளின் முன்பக்கத்திலிருந்து வெட்டி எடுத்து எங்களுக்கு அனுப்புங்கள். உங்கள் பெயர், விலாசத்துடன் உங்களுக்குப் பிடித்த பரிசையும் குறிப்பிட்டு எழுதுங்கள். நீங்கள் மேகி கிளப் உறுப்பினராக இருந்தால் உறுப்பினர் எண்ணையும் குறிப்பிட மறந்துவிடாதீர்கள். இதுவரை உறுப்பினர் ஆகவில்லை என்றால் இப்போது ஆகலாம்.

மேலே குறிப்பிட்ட விவரங்களை அனுப்பும்போது, உறுப்பினர் ஆக விரும்புவதாகவும் எழுதுங்கள். நாங்கள் உங்கள் பரிசுப் பொருளுடன் இலவச மேகி கிளப் உறுப்பினர் அட்டையையும் அனுப்புவோம்.

எங்கள் விலாசம் :
**மேகி கிளப்**
தபால்பெட்டி எண் : 5788,
புது டில்லி - 110 055.


மேகி "ஜாது ஜங்கிள்" மூலம் சொந்தமாக ஒரு காட்டை உருவாக்குங்கள்!



ஆர்ச்சி காமிக்



மேகி "பார்ட்ஹவுஸ்" உருவாக்குங்கள்!



மேகி வேர்ல்ட் ஆஃப் அனிமல்ஸ் வினாடி வினா! நீங்கள் பெறும் ஒவ்வொரு 3 இலவசப் பரிசுகளுக்கும் உங்களுக்கு மேகியின் "வேர்ல்ட் ஆஃப் அனிமல்ஸ்" வினாடி வினாவை உங்களுக்கு நாங்கள் அனுப்புவோம். அதில் வன விலங்குகளைப் பற்றிய வியப்பூட்டும் தகவல்கள் நிறைந்துள்ளன. விளையாட்டில் விவரங்கள் தரப்பட்டுள்ளன.









மேலும் பெறுவீர்: இதுவரை "லாஸ் ஆஃப் ஜங்கிள் கேம்" நீங்கள் பெறவில்லையென்றால், இப்போது பெற்றுக்கொள்ளுங்கள்!

HTA 7105TAM




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## முதல் விருப்பம் மதமே!

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அண்மையில் நடத்தப்பட்ட ஒரு ஆய்வில் அங்கு வாழும் மக்களின் தம் முதல் விருப்பம் தம் மதமும் தமது ஆழ்ந்த நம்பிக்கையுமே என்பது தெரிய வந்துள்ளது. இதற்கு அடுத்தபடியாக உடல்நலனையும், அதற்கு அடுத்து கல்வியையும் அறிவையும் நான்காவதாகச் செல்வத்தையும் விரும்புவதாக அந்த ஆய்வு தெரிவிக்கிறது.

உலகிலேயே மிகவும் முன்னேற்றம் கண்டுள்ள அந்த நாட்டு மக்களின் விருப்ப வரிசை சற்றும் வியப்பை விளைவிக்கவில்லை. 1775-83ல் நடந்த சுதந்திரப் போருக்குப் பின் அவர்கள் தம் தாய்நாட்டிலிருந்து பிரிந்து போய் அமெரிக்காவின் குடியேற்ற வாசிகளானார்கள். அப்போது அவர்கள் தம் நலவாழ்வை விரும்பினார்கள். நாட்டிற்கும் தம் சொந்தத்திற்கும் வேண்டிய செல்வத்தை அடுத்து வந்த இருநூறு ஆண்டுகளில் அடைந்தபின் அவர்கள் மதத்தையும் கடவுளைப் பற்றியும் சிந்தித்து வருவதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது?

தற்போது நம் நிலை என்ன? நம் நாட்டின் பிரதம நீதிபதிகளின் ஒருவரான திரு பகவதி பம்பாயில் கூறியதைப் பாருங்கள். "நாம் நாட்டுப் பற்றை விட்டு விட்டோம். நம் நம்பிக்கைகளும் நற்பண்புகளும் இல்லாது போய் விட்டன. இதற்குக் காரணம் பதவி மோகமும் பணத்தாசையுமே ஆகும்."

இந்த நிலையைக் கண்டிப்பாக மாற்ற முடியும். அதற்கு நாம் நம் ரிஷிமுனிவர்கள் பெரியோர் நமக்கு அளித்த போதனைகளை நினைவு கொண்டு நடப்பதே சரியான வழியாகும்.

மதிமுகம்: 89 ஆகஸ்டு 1991 புன்னகை: 2

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00








அனைத்து அராபியக் கொள்கையை கடாபி ஆதரித்தார். 1969ல் அமைதிப் புரட்சியின் வாயிலாக லிபியாவிலிருந்து பிரிட்டிஷாரை வெளியேற்றி கடாபி அந்நாட்டின் அதிபரானார். அன்றிலிருந்து அவர் ஒன்றுபட்ட அராபிய நாடு பற்றிய கனவை நனவாக்க முயன்று வரலானார். 1971ல் சிரியாவை லிபியாவுடன் சேர்ந்து விடுமாறு கேட்டுக் கொண்டார்.

# அழிந்து போகும் எல்லைகள்

கடந்த மார்ச் மாத இறுதியில் ஒரு முக்கிய சம்பவம் நிகழ்ந்தது. வட ஆப்பிரிக்காவில் டோப்ருக் அருகே எகிப்து, லிபியா எல்லையிலுள்ள நுழைவாயிலில் அந்த நிகழ்ச்சி ஏற்பட்டது. லிபியா அதிபர் கர்னல் கடாபி ட்ராக்டர்களைக் கொண்டு எல்லைப்புற வாசலை இடித்துத் தள்ளினார். இருநாடுகளுக்கிடையே இருந்த சுவரைத் தகர்த்து மக்களிடையே நட்பு மனப்பான்மையை ஏற்படுத்த கடாபி இச்செயலை மேற்கொண்டார்.

ஒரு ஜாதி மக்களைப் பிரித்த செயற்கை எல்லைக்கோடு அழிந்தது என கடாபி முழங்கினார். அராபிய ஒற்றுமைக்கு கடாபி மேலும் பல நடவடிக்கைகளை மேற்கொண்டார்.

எகிப்து அதிபர் நாஜரின் அதன் பின் எகிப்துடன் கலந்து ஒரே நாடாவது என்பது அவரது திட்டம்.

இச்சமயம் திடீரென எகிப்தில் அன்வர் சதாத் பதவிக்கு வந்தார். இதன் பிறகு எல்லைத் தகராறுகள் ஏற்பட்டன. இதற்காக 1977ல் சிறிய போர்கூட நிகழ்ந்தது. 1981ல்கூட முபாரக் எகிப்தின் அதிபர் ஆன பிறகும் இந்தப் பகைமை நீடித்தது.

இஸ்ரேயில்-அராபியப் போர் நடக்கையில் 1979ல் எகிப்து இஸ்ரேயிலுடன் ஒரு தனி ஒப்பந்தம் செய்து கொண்டது. இதனால் சில அராபிய நாடுகள் ஆத்திரம் கொண்டு எகிப்துடன் தாம் கொண்டிருந்த தொடர்பை முறித்துக் கொண்டன. ஆனால் முபாரக்கின் இடைவிடாத முயற்சியைக்

கண்ட அந்நாடுகள் மீண்டும் ஒவ்வொன்ருக எகிப்துடன் தொடர்பு கொள்ளத் தொடங்கின. இதனுல் 1989ல் மொராக்கோவில் நடந்த அராபிய நாடுகள் கூட்டத்தில் எகிப்து மீண்டும் இடம் பெற்றது.

அதன் பின் கடாபிக்கும் முபாரக்கிற்கும் நடந்த பேச்சுவார்த்தைகளின் பயனுக இருநாடுகளிடையே தொடர்புகள் ஏற்பட்டன. விசா ஒழிப்பு, ரயிலில் இருநாடுகளுக்கும் போய்வர வசதி என்றெல்லாம் ஏற்பட்டு இருநாடுகளிடையே வணிகமும் பெருகியது.

இவையெல்லாம் நடந்த பிறகு ஏகாதிபத்திய பிரிட்டிஷாரால் லிபியாவையும் எகிப்தையும் பிரிக்கக் கட்டிய எல்லை மதிலேத் தகர்க்க கடாபி தீர்மானித்தார். பிரிட்டிஷ் படை லிபியாவிலிருந்து வெளியேறிய 21வது ஆண்டு நிறைவின்போது இந்தச் சுவரை அவர் தகர்த்து எறிந்தார்.

இதைப்போல இரு ஜெர்மனிகளுக்கிடையே இருந்த சுவர் அண்மையில் தகர்க்கப்பட்டது. இந்த மாதிரிச் செயல்கள் இருநாடுகளுக்கிடையே இருந்த செயற்கை எல்லைக்கோடுகளே அழித்து மக்களிடையே நட்புறவை வலுவாக்கி வருகின்றன.




Colonel Muammar Gaddafi



# வேண்டப்பட்டவர்கள்

**ம**ருதூரில் ராமு என்பவன் தன் தாய் தந்தையரோடும், மனைவி லட்சுமியோடும் வசதியான வீட்டில் வாழந்து வந்தான். அவனது தந்தைக்கு வயதான போதிலும் சில மாணவர்களுக்கு ட்யூஷன் எடுத்தும் வீட்டுத் தோட்டத்தில் காய்கறிகளைப் பயிர் செய்தும் மகனின் வருமானத்தோடு தன் பங்கையும் சேர்த்தார். இதனால் சிரமம் இல்லாமல் குடும்பத்தை நடத்த ராமுவால் முடிந்தது.

ஆனால் வந்த நாளிலிருந்தே லட்சுமி தனிக் குடித்தனம் போக ஆசைப்பட்டாள். தன் மாமனார், மாமியார் தனக்கு சுமை என்றும் அவர்களுக்குச் செலவு செய்வதால் தான் நகை, புடவை என வாங்கவோ பணம் சேர்க்கவோ முடியவில்லையே என்றும் ஏங்கினாள். அவள் தன் கணவனிடம் பலமுறை தனிக் குடித்தனம் போவது பற்றிப் பேசியும் எவ்வித பலனும் ஏற்படாதது கண்டு தன் மாமியாரையும் மாமனாரையும் சமயம் கிடைத்த போதெல்லாம் கடுஞ்சொல் கூறித் திட்டி வந்தாள்.

மருமகள் என்னதான் திட்டிக் கொடுமைப்படுத்தினாலும் ராமுவின் தந்தையும் தாயும் அவற்றைப் பொறுத்துக் கொண்டனர். தம் குடும்பம் பிளவுபட்டு ஊரார் நகைப்பிற்கு இடம் அளிக்கக் கூடாதே என அவர்கள் நினைத்தனர்.

கொஞ்ச காலத்திற்குப் பின் லட்சுமியின் தங்கை சாரதாவிற்கும் திருமணம் நடந்தது. சாரதாவின் கணவன் ஊரும் மருதூரே. சாரதாவும் தன் கணவனோடு வாழ மருதூருக்கு வந்தாள். அவளது கணவன் ஒரு வீட்டின் பகுதியை வாடகைக்கு எடுத்திருந்தான்.

—சிவனார் செல்வன்—



லட்சுமி தன் தங்கையைக் காணச் சென்ருள். சாரதாவின் வீட்டில் அவள் கணவன், மாமனர், மாமி யார், கணவனின் பாட்டி கணவ னின் தம்பி தங்கை என்று பலர் இருப்பது கண்டு அவள் முகத்தைச் சுளித்தாள். அவள் சாரதாவைத் தனியே அழைத்துப் போய் "என்னடி இவ்வளவு கூட்டம்! இவ்வளவு பேருக்கும் நீ ஊழியம் செய்ய வேண்டுமா? பேசாமல் தனிக்குடித் தனம் போய் விடு. உனக்குக் கஷ் டம் இராது. நாலு காசும் சேர்த்து வைக்க முடியும்" என்ருள்.

சாரதாவோ "அதெப்படி? குடும் பம் என்ருல் இப்படித்தான் இருக் கும். எல்லாவற்றையும் சமாளித் துக் கொண்டுபோக வேண்டியது தான். பெரியவர்களை அலட்சியம் செய்து பிரிந்து போய்விட்டால் அவர்கள் கதி என்ன ஆவது?" என்ருள்.

லட்சுமியோ "அதெல்லாம் அவரவர்கள் தம்மைத்தாமே கவ னித்துக் கொள்ள வேண்டியது தான். எவ்வளவு நாட்களுக்கு நாம் அவர்களை வைத்துத் தாங்க முடி யும்?" என்று கேட்டாள்.

சாரதாவோ "அக்கா! நீ சொல் வது சரி இல்லை" எனவே லட்சுமி யும் "சரி. சரி. வரப்போகிறக் கஷ் டத்தை நீயே அனுபவி. நான் என் னவோ என் கணவனிடம் சொல்லித் தனிக்குடித்தனம் போகத்தான் போகிறேன். பெரியவர்கள் பெரிய வர்கள் என்று அவர்களுக்கு ஊழி யம் செய்து கொண்டே இருந்தால் அவர்கள் காலை நீட்டிக் கொண்டு சுகமாகப் படுத்திருப்பார்கள். ஒரு வர் சம்பாதிக்கையில் அதைக் கொண்டு யார் யாரோ சுகம் அடை வதா?" என்ருள். சாரதா எதுவும் பதில் கூறவில்லை. சற்று நேரத்திற் குப் பின் லட்சுமியும் தன் வீட்டிற் குச் சென்ருள்.

அன்றிரவே லட்சுமி "இந்த வீட்டில் நான் மாடு போல உழைக்க முடியாது. நாம் தனிக்குடித்தனம் போய் ஆக வேண்டும். வேறு வீடு பார்க்கப் போகிறீர்களா இல்லையா?" என்று கேட்டாள். ராமுவும் "தனிக் குடித்தனம் போனுல் எவ்வளவு

பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டும் தெரியுமா? இங்கே நமக்கு நல்ல பெரிய வீடு இருக்கிறது. இதை விட்டுவிட்டு ஒரு சிறு வாடகை வீட்டில் போயா இருக்க வேண்டும்? யோசித்துப்பார்'' என்றான்.

லட்சுமியோ ''எந்தப் பிரச்னை வந்தாலும் நான் சமாளிப்பேன். நாம் நம் எதிர்காலத்தைப் பார்க்க வேண்டும். நம் குழந்தைகளை முன்னுக்குக் கொண்டுவர வேண்டாமா? இப்படியே இருந்தால் எல்லாப் பணமும் கரைந்து போய்விடும்'' என்றாள்.

ராமு சற்று யோசித்தான். இலட்சுமிக்கு அறிவுரை கூறினால் அவள் ஏற்கமாட்டாள் என்பது அவனுக்குத் தெரிந்துவிட்டது. அவளது போக்கை வேறு ஏதாவது ஒரு உபாயத்தால் தான் மாற்ற வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான்.

ராமுவும் '' உன் தொல்லை அதிகமாகிவிட்டது. சரிசரி. நாளையே ஒரு வீட்டைப் பார்த்து வாடகைக்கு எடுத்துவிடுகிறேன். நீ இஷ்டப் பட்டபடி தனிக் குடித்தனம் போய் விடலாம்'' என்றான்.

ராமு மறுநாளே ஒரு வீட்டை வாடகைக்குப் பேசிவிட்டான். அந்த வீட்டில் முற்பகுதியில் வீட்டுச் சொந்தக்காரனும் பிற்பகுதியில் மாணிக்கம் என்பவனும் குடும்பத்தோடு இருந்தனர். மத்திப்பகுதி



தான் ராமுவுக்கு.

வீட்டுக்காரனின் மனைவி மகா வாயாடி. அவளது பிள்ளைகளோ போக்கிரிகள். ஊர்சுற்றிகள். இந்தக் குடும்பத்தினரைக் கண்டாலே ஊரே பயப்பட்டது. மாணிக்கத்தின் மனைவி முத்தம்மா ஒரு வாயில்லாப் பிராணி. அவள் மாமியார், மாமனார் கணவன் ஆகியோர் செய்யும் கொடுமைகளைப் பொறுத்துக் கொண்டு எல்லா வேலைகளையும் செய்து வந்தாள். இந்தச் சூழ்நிலையில் லட்சுமி தன் குழந்தைகளுடனும் கணவனுடனும் வாழ வேண்டியதாயிற்று.

லட்சுமியின் குழந்தைகள் வீட்டுக்காரக் குழந்தைகளின் சேர்க்கையால் சரியாகப் படிக்காமல் கெட்ட



வார்த்தைகளை எல்லாம் கற்றுக் கொண்டார்கள். முன்போ அந்த வீட்டில் ராமுவின் தந்தை அவர்களை நல்வழியில் செலுத்தி தினமும் பாடங்களைக் கற்பித்து வந்தார். இப்போது அது போய் அக்குழந்தைகள் போக்கு மாறிவிட்டது.

ஒருநாள் மாணிக்கம் தன் மனைவி முத்தம்மாவைத் திட்டி அடித்துக் கொண்டிருந்தான். அதைக் கண்ட லட்சுமி அவன் பகுதிக்குப் போய் "ஏன் இப்படி அவளை அடிக்கிருய்? அடிக்காதே" என்ருள். அப்போது முத்தம்மாளின் மாமியார் "நீ யாரடி உபதேசம் செய்ய? என் மகன் தன் மனைவியை அடிப்பான் உதைப்பான். என் மகன் ஒன்றும் உன் கணவனைப் போல பூம்பூம் மாடு அல்ல. உன் கணவனுக்கு உன்னை அடக்கத் தெரியவில்லை. அதுதான் நீ தலைகால் தெரியாமல் குதிக்கிருய்" என்ருள்.

அதைக் கேட்ட லட்சுமி ஆவேசத்தோடு "என் கணவனு பூம்பூம் மாடு? நானு குதிக்கிறேன்? வார்த்தைகளை யோசித்துச் சொல்லுங்கள். நான் ஒன்றும் உங்களைப் போல வாய்க்கு வந்தபடிப் பேசுபவள் அல்ல" என்று கேட்டாள். முத்தம்மாளின் மாமியாரும் "ஆமாம். அவன்தான் நீ சொல்வதற்கெல்லாம் தலையை ஆட்டுகிருனே. இல்லாவிட்டால் உன் பேச்சைக் கேட்டு தன் தாய் தந்தையரை 'அம்போ' என்று விட்டுவிட்டு தனிக்குடித்தனம் போட்டு இங்கே வந்திருப்பானு! என்மகன் அப்படி இல்லை. எங்கள் பேச்சைக் கேட்பான். தன் மனைவியின் தாசானுதாசனுக ஆகிவிடமாட்டான். தெரிந்ததா? பேசாமல் உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ. எங்கள் விஷயத்தில் தலையிடாதே" என்று பட்டென முகத்தில் அடித்தது போலக் கூறினுன்.

அதைக்கேட்ட லட்சுமி எதுவும் பேசமுடியாமல் தன் பகுதிக்குச் சென்றுவிட்டாள். அன்று மாலை அலுவலகத்திலிருந்து திரும்பி வந்த ராமு லட்சுமியிடம் "கேட்டாயா விஷயத்தை? என் அப்பாவுக்கு அதிர்ஷ்டம் அடித்து வைரமும் முத்

தும் கிடைத்திருக்கிறதாம். அவர்தம் பழங்காலக் கட்டிலே நகர்த்தவே அதன் நடுப்பலகை ஒடிந்து அதிலி ருந்து வைரக்கற்களும், முத்துக்களும் வெளிப்பட்டனவாம்'' என்ருன்.

அதுவரை முத்தம்மாள் மாமி யார் சொன்னது பற்றி வருத்தப் பட்டுக் கொண்டிருந்த லட்சுமி ''வைரமும், முத்துமா? அப்படி யாஞல் இப்போதே நம் வீட்டிற் குப் போகலாம். கிளம்புங்கள்'' என்ருள் மகிழ்ச்சி ததும்ப.

''என் தகப்பனுருக்கு வைரமும், முத்துக்களும் கிடைத்தன என்ற தும் அந்த வீடு இப்போது உன் னுடையதாகிவிட்டதோ'' என்று கேட்டான் ராமு. அப்போது லட்சுமி யின் தங்கை சாரதா அங்கு வந் தாள். அவள் லட்சுமியைப் பார்த்து ''இப்போது அதை உன் வீடு என் கிருயே! தனிக்குடித்தனம் போகு முன் அது உன் வீடாக இருக்க வில்லேயா? சரிசரி, நீ எப்படி நினேத்தாலும் உன் மாமியாரும் மாமனுரும் நீ நல்லவள் என்றே எல்லோரிடமும் சொல்லி வரு கிருர்கள். பணமோ, பணம் இல் லேயோ அதுதான் உன் வீடு. உனக்கு உள்ள பணத்தாசை எனக் குத் தெரியும் இனி அதைவிடு. உன் நலனேயும் உன் குழந்தைகளின் நலனேயும் உன் கணவனின் நலனே யும் உன் மாமனுரும் மாமியாரும் கவனிக்காமல் வேறு யார் கவனிப் பார்கள்?'' என்ருள்.

லட்சுமியும் ''ஆமாம். நான் மனம் மாறிவிட்டேன். அங்கே பணம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அதுவே என் வீடு. என் சொர்க் கம். நீ என்னே விடச் சிறியவளா ஞலும் எவ்வளவு புத்திசாலி! இனி வேண்டாம் தனிக் குடித்தனம்'' என்ருள்.

அப்போதே லட்சுமி தன் கண வனுடனும் குழந்தைகளுடனும் தன் பழைய வீட்டிற்கே போய்விட்டாள். அவளது மாமனுரும் மாமியாரும் அவளே வரவேற்றனர்.



# சொன்னது அவன் தானே!

ஜமீன்தாரரின் வீட்டில் விலையுயர்ந்த நகைகள் ஒரு நாளிரவு திருடு போயின. அதற்கு இரண்டாவது நாள் கந்தன் என்ற ஜமீன்தாரரின் வேலைக்காரன் கடைத் தெருவில் அவற்றை விற்க முயன்ற போது பிடிப் பட்டான். ஜமீன்தாரரின் பொக்கிஷ அறைக்குள் ஒருவன் புகுந்து திருட வேண்டும் என்றால் அதற்கு வேறு யாராவது உதவியே இருக்க வேண்டும்.

கந்தனிடம் அவன் கூட்டாளி யார் என்று கேட்டபோது அவன் யாருமே இல்லை என்று சாதிக்கலானான். அப்போது திவான் திருமலை அவனிடம் "அப்படியானால் அவன் ஏன் தான்தான் உதவியதகச் சொன்னான்?" என்று கேட்டார். "யார் சொன்னது?" என்று கந்தன் கேட்டதும் அவர் "அதுதாண்டா அவன் பெயர் சட்டென ஞாபகத்திற்கு வரவில்லையே" என்றார்.

கந்தனும் "ஓ! வீடு பெருக்கும் வீரய்யனா?" எனவே திவான் "இல்லை. அவன்தான் உன் ஒரு கூட்டாளி என்பது எனக்குத் தெரியுமே. இன்னொருவன்... அவன் பெயர்..." என்று யோசிப்பது போல நடித்தார்.

"அப்படியானால் காவல்காரன் கண்ணாயிரம் தான் சொல்லி இருப் பான். துரோகி, காட்டிக் கொடுத்து விட்டானே" என்று கத்தினான் கந்தன். திவான் உடனேயே கந்தனையும் வீரய்யனையும், கண்ணாயிரத்தை யும் காவல் அதிகாரிகளிடம் ஒப்படைத்து நீதிமன்றத்திற்கு இழுத்துப் போகச் சொன்னார்.






5

*[வினோதன் தன் அதிசய சக்தியால் பல ஏழைகளின் குடிசைகளை எரிவதிலிருந்து காப்பாற்றினான். அதன்பின் ஒரு கொள்ளைக் கூட்டத்தைப் பிடித்துக் கொடுத்து, கொள்ளைக்காரர்களின் மனதை மாற்றி, அவர்களை மன்னன் மன்னித்து விடுதலை செய்யச் செய்தான். அதன் பிறகு—]*

**வி**னோதன் தன்னை உருவாக்கி அபூர்வ சக்தி அளித்த சதானந்த முனிவரைக் கண்டு வணங்கினான். அவரும் "வினோதா! நீ உன் கடமையைச் சரிவரச் செய்தாய். மிக்க மகிழ்ச்சி" என்றார். அவனும் "நான் இங்கிருந்து போனதும் பிரச்னைகளை ஒன்றன்பின் ஒன்றாக எதிர் நோக்க வேண்டியதாயிற்று. இந்த உலகில் அமைதியை நிலைநாட்டி மக்கள் சுகமாக வாழ வைக்க வேண்டும் என்பதே என் விருப்பம்" என்றான்.

சதானந்தரும் "உன் விருப்பம் நிறைவேறட்டும். நீ எங்கு சென்றாலும் செயல்படுவாய். கடவுள் இவ்வுலகைப் படைத்தார். ஆனால் மனிதன் தன் சுயநலத்திற்காக அதனைப் பாழாக்குகிறான். நிம்மதியாய் சுகவாழ்வு வாழ நல்ல மனம்



வேண்டும். இந்த நல்ல மனதை அடையப் பல அனுபவங்களை அடைந்ததாக வேண்டும் வினோதா! நீ உலகின் இன்னும் பல பாகங்களுக்குப் போய் வா. கெட்ட வழியில் செல்பவர்களை நல்ல வழிக்குக் கொண்டுவர உனக்கு என் ஆசிகள்" என்று கூறினர். வினோதனும் அவரது நல்லாசிகளுடன் அங்கிருந்து கிளம்பிச் சென்றான்.

மாலை வேளைக்கு வினோதன் ஓரிடத்தில் பல விளக்குகள் எரிந்து கொண்டிருப்பதைக் கண்டான். அது ரத்தினபுரி. நாட்டின் தலைநகர். அதன் பெரிய வீதியில் மக்கள் நடமாட்டம் மிக அதிகமாக இருந்தது. வினோதனும் அங்கு சென்று மக்கள் கூட்டத்தில் கலந்து நின்றான்.

அப்போது இரு வீரர்கள் தமுக்கு அடித்து ஒரு அறிவிப்பைச் செய்தனர். "இதனால் சகல ஜனங்களுக்கும் அறிவிப்பது என்னவென்றால் நம் மன்னரின் புதல்வி இளவரசியார் நோயுற்று இருப்பது யாவரும் அறிந்ததே. இதுவரை எந்த வைத்தியராலும் அவரது நோயை குணப்படுத்த முடியவில்லை. எனவே இளவரசியாரின் நோயைக் குணப்படுத்துபவருக்கு இளவரசியாரின் நிறைக்குச் சமமான தங்கம் அளிக்கப்படும்."

அந்தப் பறை சாற்றலைக் கேட்ட மக்கள் தமக்குள் பலவிதமாகப் பேசலாயினர். அவ்வளவு தங்கத்தை அடையப்போகும் அதிர்ஷ்டசாலி யாரோ என நினைக்கலானார்கள். அப்போது இருவர் மட்டும் தனியே நின்று சிரித்துக் கொண்டிருப்பதை வினோதன் கண்டு அவர்களருகே போய் நின்றான்.

அப்போது அவர்களில் உயரமாக இருந்த சர்ப்பகேது என்பவன் குள்ளமாக இருந்த கும்பாண்டன் என்பவனைப் பார்த்து "கும்பா! இந்த மாதிரி ஒரு சந்தர்ப்பத்தைத் தான் நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். இந்த இளவரசியின் நோயைத் துளசிச் சாறாலும் வில்வ இலை சாறாலும் போக்கி விட முடியும். தினமும் காலையிலும் மாலையிலும் அவற்றின் சாற்றை உட்கொண்டால் இளவரசியின்

நோய் பறந்து விடும். ஆனால் இதனை மன்னனிடம் கூறப் போவ தில்லை. நான் ஆசைப்படுவதே வேறு. அதனை நான் அடைந்தே தீர்வேன். அதனால் நான் போய் மன்னனைக் கண்டு அந்தத் தங்கத்தைவிட மேலான பரிசைப் பெறப் போகி றேன்'' என்றான்.

அப்போது குள்ளையன் கும் பாண்டன் ''குருவே! மன்னர் தங் கம் கொடுப்பதாகத்தானே அறிவித் திருக்கிறார். அதைவிட விலை மதிப் புள்ள பரிசைத் தாங்கள் பெறப் போவதாகக் கூறுகிறீர்களே. அது என்ன?'' என்று கேட்டான்.

சர்ப்பகேதுவும் ''சிஷ்யா! என் திட்டம் பெரிது. நான் இளவரசியை மணந்து இந்த நாட்டின் மன்ன னாகி விடுவேன். ஏனெனில் மன்ன னுக்கு ஆண் சந்ததி இல்லை. நான் மன்னனாகிவிட்டால் நீ என் அந்த ரங்க ஆலோசகனும் முதல் மந்திரியு மாகி ஆகிவிடுவாய். ஆனால் இதனை அடைய என் திட்டப்படி நீ நடக்க வேண்டும்'' என்றான்.

கும்பாண்டனும் ''ஆகா! நீங் கள் ராஜா! நான் மந்திரி. பேஷ் பேஷ். முதலமைச்சர் பதவி என் றால் கசக்குமா என்ன? சொல் லுங்கள் உங்கள் திட்டத்தை. அதனை நான் நிறைவேற்ற உதவுகிறேன்'' என்றான்.

சர்ப்பகேதுவும் ''சிஷ்யா! நம் நகரின் மேற்கே ஓடும் நதியின் கரையில் நாம் ஒரு ஆலமரத் தடியே உட்கார்ந்து அடிக்கடி யோசித்து வருவோர் போவோரை ஏமாற்றிப் பணம் பறித்து வந் தோமே. அந்த இடம் நினைவில் இருக்கிறதா?'' என்று கேட்டான்.



கும்பாண்டனும் ''ஏன் நினைவின் இல்லாமல்? அந்த மரத்தில் ஒரு பொந்துகூட இருக்கிறதே!'' என்றான். சர்ப்பகேதுவும் ''பேஷ்! நன்றாக நினைவில் வைத்துக்கொண்டிருக் கிறாய். சரி, என் திட்டத்தைக் கேள். நான் மன்னனைக் கண்டு அந்த ஆலமரம் அபூர்வ சக்தி கொண்டது என்றும் அதனிடம் போய் இளவரசி குணமடைய என்னவழி என்று கேட் டால் அது கூறும் என்றும் சொல் வேன். மன்னன் அந்த மரத்திற்கு



வருவான். நீ அதற்கு முன்பே அதன் பொந்தினுள் மறைந்து இருக்க வேண்டும். மன்னன் தன் மகள் குணமடைய என்ன வழி என்று கேட்டதும் நீ மரம் பதில் கூறுவது போல "மன்னு! இங்கிருந்து நூறடி தூரத்தில் ஒரு யோகி இருக்கிறூர். மிகவும் உயரமானவர். உன் மகளை அவருக்குக் கல்யாணம் செய்து வைத்து உன் நாட்டை அவருக்குக் கொடுத்து விடு. அப்போதுதான் உன் மகள் பிழைப்பாள். அவளது நோயும் குணமடையும். இதைச் செய்யாவிட்டால் உன் மகள் இன்னமும் ஐந்து நாட்களில் இறந்து போவாள்" என்று கூறு. மன்னன் அந்த யோகியைத் தேடிச் செல்வான். நான் அந்த யோகி போல வேஷம் போட்டுக் கொண்டு அமர்ந்திருப்பேன். மன்னனின் வேண்டுதலே ஏற்று இளவரசியை மணந்து இந்நாட்டின் மன்னனுகி விடுவேன். பிறகு நீதான் முதலமைச்சர்" என்ருன்.

குள்ளக்கும்பாண்டனும் "குருவே! என்ன அருமையான திட்டம். நாளையே இதனைச் செய்து முடிப்போம். நீங்கள் இன்றே போய் மன்னனைக் கண்டு நாளை அந்த மரத்தடிக்கு போகச் சொல்லுங்கள்" என்ருன். இப்படியாக குருவும் சீடனும் பேசியதை முழுவதுமாக வினோதன் கேட்டு கொண்டு நின்ருன்.

இந்த மோசக்காரர்கள் இருவரும் இப்படியா இந்நாட்டு மன்னனை ஏமாற்றப் போகிருர்கள்! நாளையா இந்தத் திட்டம் நிறைவேறப்போகிறது? அது எப்படி முடியும் என்பதைப் பார்க்கலாம் என எண்ணிக் கொண்டு வினோதன் கும்பாண்டன் அந்த ஆலமரத்தின் பொந்தில் ஒளிந்து கொள்வதற்கு முன் அந்த மரத்தின் மீது ஏறி அடர்ந்த கிளைகளுக்கிடையே உட்கார்ந்து கொண்டான்.

சர்ப்பகேது மன்னனைக் கண்டு "அரசே! உங்கள் மகள் குணமடைய எனக்கு ஒரு வழி தெரியும். அதன்படி நீங்கள் இவ்வூரின் வடக்கே நதிக்கரையில் பாழடைந்து கிடக்கும் ஒரு கோவிலிலிருந்து நூறடி

தூரத்தில் உள்ள விசேஷ சக்தி வாய்ந்த ஆலமரத்தின் கீழே போய் நின்று அதனிடம் உங்கள் மகள் குணமடைய என்ன வழி என்று கேளுங்கள். அது கூறுகிறபடி நடந்தால் உங்கள் மகள் நோயிலிருந்து விடுபடலாம். இப்படியே எதுவும் செய்யாமல் இருந்தால் உங்கள் மகள் இறந்து போகக்கூடும்'' என்ருன்.

மன்னனும் ''ஓ! அந்த மரம் அவ்வளவு சக்தி வாய்ந்ததா? இதுவரை என் மகளின் நோயைக் குணப்படுத்த என்னென்னவோ செய்து பார்த்து விட்டேன். எதனுலும் அவளது நோய் போகவில்லே. இந்த அபூர்வ சக்தியாலாவது போகிறதா என்று பார்க்கிறேன்'' என்ருன்.

சர்ப்பகேதுவும் ''நாளே நல்ல நாள். அதனுல் நாளேக்கே அந்த மரத்தைக் கண்டு வணங்கி வழி சொல்லக் கேட்டு அதன்படி செய்யுங்கள் ஆனுல் வீரர்கள் புடைசூழ அந்த மரத்தின் கீழ் நீங்கள் நின்று வேண்டக்கூடாது. நீங்கள் மட்டுமே நின்று கேட்க வேண்டும்'' என்று கூறிவிட்டுச் சென்ருன்.

மறுநாள் மன்னன் சில வீரர்களோடு ஆற்றின் கரைக்குப் போனுன். வீரர்களே ஓரிடத்தில் நிறுத்திவிட்டு அவன் மட்டும் ஆலமரத்தடியே சென்ருன். அவன் அந்த மரத்தைப் பார்த்து ''மரமே! என் மகளின் நோயைப் போக்க நான்



என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டான்.

அப்போது பொந்தில் மறைந்திருந்த கும்பாண்டன் ''மன்னு! இங்கிருந்து நூறடி தூரத்திலுள்ள ஒரு பாழடைந்த கோவிலில் ஒரு கபட சன்னியாசி இருக்கிருன். அவனேக் கொன்று விட்டு அவனது சீடன் கும்பாண்டனுக்கு உன் மகளேக் கல்யாணம் செய்து வை. அந்தக் கும்பாண்டன் நல்லவன். நேர்மையானவன். சற்றுக் குள்ளமாகத்தான் இருப்பான். உன் மகள் நோயிலிருந்து விடுபடவும் உயிர் பிழைக்கவும் அந்தக் கும்பாண்டனுக்கு உன் மகளே மணமுடித்து வைப்பது தான் ஒரே வழி'' என்ருன்.



அதைக் கேட்ட மன்னன் "அப்படியா? நான் போய் அந்தக் கபட சந்நியாசியைக் கொன்றுவிட்டு அவனது சீடனை கும்பாண்டனுக்கே என் மகளை மணம் செய்து வைக்கிறேன்" என்றான். இதற்குள் மரத்தின் மீதிருந்த விநோதன் "மன்னா! நீ சற்று முன் ஒரு குரல் கூறியபடிச் செய்யாதே" எனக் கூறியவாறே மரத்தின் மீதிருந்து கீழே குதித்தான்.

மன்னன் ஆச்சரியப்பட்டு "யார் நீங்கள்?" என்றான். விநோதனும் "முதலில் இந்த மரத்தின் பொந்தினுள் இருக்கும் கும்பாண்டன் என்பவனைப் பிடியுங்கள். அடுத்து அந்தப் பாழடைந்த கோவிலுள்ள சர்ப்பகேது என்ற மோசக்காரனையும் பிடியுங்கள். நேற்று உங்களிடம் வந்தவன் அவனே. இன்று சந்நியாசியாக வேஷம் போட்டுக் கொண்டு அங்கே உட்கார்ந்திருக்கிறான். இருவரையும் பிடித்தபின் இவர்களது சதித்திட்டம் பற்றிக் கூறுகிறேன். இந்த மரத்திற்கு அபூர்வ சக்தி இருப்பதாகச் சொல்லி உங்களை ஏமாற்றி விட்டார்கள்" என்றான்.

அதைக் கேட்ட மன்னன் திகைத்துப்போய் "என்னை இவர்கள் ஏமாற்றிவிட்டனர். ஆனால் எதற்காக இவர்கள் இப்படிச் செய்ய வேண்டும்?" என்று கேட்டான்.

விநோதனும் "எல்லாம் உங்களது நாட்டை உங்கள் மகளை மணப்பதால் அடையும் ஆசையில்தான். உயரமான சர்ப்பகேது நாட்டின் அரசனாக ஆக நினைத்தான். அதற்கு அவனது சீடனை இந்த கும்பாண்டன் உதவுவதாகக் கூறினான். ஆனால் ஆசை யாரை விட்டது? இந்தக் கும்பாண்டன் தானே இந்நாட்டின் மன்னனாக ஆகிவிட நினைத்துத் தன் குருவையே ஒழிக்கத் தீர்மானித்துவிட்டான். அதனால்தான் பொந்திலிருந்து அப்படிக் கூறினான்" என்றான்.

மன்னனும் உடனே தன் வீரர்களை அழைத்து மரப் பொந்தில் யாராவது இருந்தால் பிடித்து வெளியே தூக்கி வரும்படிக் கட்டளை இட்டான்.

வீரர்களும் பொந்திலிருந்த குள்ளக் கும்பாண்டனை வெளியே கொண்டு வந்தார்கள். மன்னன் உடனே சில வீரர்களை அனுப்பிப் பாழடைந்த கோவிலில் சன்னியாசி வேடத்திலிருந்த சர்ப்பகேதுவை இழுத்து வரச் சொன்னான்.

இதற்குள் வினோதன் "இந்தக் குமபாண்டன் சர்ப்பகேதுவின் சீடன். சர்ப்பகேது திட்டம் போட்டு இந்த மரத்திற்கு விசேஷ சக்தி இருப்பதாகக் கூறி உங்களை நம்ப வைத்தான். பிறகு இந்த சீடனை இந்த மரத்தின் பொந்தில் மறைந்திருக்கச் சொல்லி நீங்கள் இங்கு வந்ததும் மரம் பேசுவதுபோல இவன் பேசி உங்கள் மகளை இந்தக் கபட சன்னியாசி மணந்தால் அவளது நோய் மறையும் என்று சொல்லச் சொல்லி இருந்தான். ஆனால் இந்த சீடன் தன் குருவையே ஒழித்து விட்டுத் தானே இளவரசியை மணக்கப் பேராசைப் பட்டான். அதனால் தன் குரு கூறியபடிச் சொல்லாமல் அதனைத் தனக்குச் சாதகமாக மாற்றிக் கூறினான். உங்கள் மகளின் நோயைப் போக்க நான் வழி கூறுகிறேன். தினமும் காலையில் துளசிச் சாறையும் மாலையில் வில்வ இலைச் சாறையும் உட்கொண்டால் அவள் ஒரு வாரத்தில் குணமடைவாள்" என்றான்.

மன்னன் ஆச்சரியப்பட்டு வினோதனை பார்த்து "ஆகா! இந்த சதித்



திட்டத்தை நீங்கள் எப்படி அறிந்தீர்கள்? நல்லவேளை சமயத்தில் வந்து என்னைக் காப்பாற்றினீர்கள்" என்றான்.

வினோதனும் "நேற்று உங்கள் அறிவிப்பை நானும் கடைவீதியில் நின்று கேட்டுக் கொண்டிருந்தேன். அப்போது இந்த மோசக்கார சர்ப்பகேதுவும் கும்பாண்டனும் என் பக்கத்தில் நின்று கொண்டு பேசிக் கொண்டிருந்தார்கள். நான் இருந்தது இவர்களுக்குத் தெரியவில்லை. அதனால் இவர்கள் திட்டம் முழுவதையும் கேட்டுக் கொண்டிருந்தேன். இந்தக் கயவர்களின் சதியை முறியடிக்க நான் செயல் பட்டேன்" என்றான்.

இதே சமயம் வீரர்கள் சர்ப்ப

கேதுவை இழுத்து வந்தார்கள். அப்போது மன்னன் "அடே கபட சன்னியாசி! உன் திட்டப்படி நான் என் மகளை உனக்கு மணம் செய்து வைக்க வேண்டுமா அல்லது உன் சீடன் கூறியபடி உன்னைக் கொன்றுவிட்டு உன் சீடன் கும்பாண்டனுக்கு என் மகளைக் கல்யாணம் செய்து வைக்க வேண்டுமா?" என்று கேட்டான்.

சர்ப்பகேதுவும் "அப்படியா கும்பாண்டன் கூறினன்? அட குருத்துரோகி!" என்று கத்தினன். அப்போது விநோதன் "யார் துரோகி! அவன் மட்டுமா? நீயும் தானே மன்னனுக்கு துரோகம் செய்ய நினைத்தாய். சாதாரண துளசி சாறையும் வில்வ இலைச் சாறையும் கொண்டு குணப்படுத்த வேண்டிய நோயை பயங்கரம் எனக் கூறி இளவரசியையும் நாட்டையும் அபகரிக்கப் பார்த்தாயே. நல்ல வேளை. உன் திட்டத்தையும் நீயும் உன் சீடனும் பேசியதை எல்லாம் நான் கேட்டேன். அதனல் மன்னனை உன் சதியிலிருந்து காக்க முடிந்தது" என்றான்.

கும்பாண்டனும் சர்ப்பகேதுவும் எதுவும் பேச முடியாமல் தலை குனிந்து நின்றார்கள். மன்னன் அவர்களை இழுத்துப் போய் சிறையில் தள்ளும்படிக் கட்டளை இட்டான். பிறகு விநோதனைப் பார்த்து "நீங்கள்தாம் எவ்வளவு நல்லவர்! என்னையும் என் நாட்டையும் காத்துக் கொடுத்தீர்கள். மிக்க நன்றி இவ்வளவும் செய்த மகாபுருஷரான தாங்கள் யாரோ?" என்றான்.

விநோதனும் "மன்னா! உன் மகளின் நோய் போக அவள் தினமும் காலையில் துளசிச் சாற்றையும் மாலையில் வில்வ இலைச் சாற்றையும் ஒரு வார காலத்திற்குப் பருகட்டும். அவள் குணமடைந்து விடுவாள்" என்றான். மன்னனும் அவனுக்கு நன்றி கூறிக்கொண்டிருக்கும்போதே விநோதன் மாயமாய் மறைந்தான்.

(தொடரும்)






சந்திக்கு மேலா!

தன் முயற்சியில் சற்றும் அமனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினுன். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கி செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! தான தர்மம் செய்ய வேண்டியதுதான். ஆனுல் சில சமயங்களில் இச்செய்கை பெயரைக் கெடுப்பதோடு ஆபத்தாகவும் முடியும். இதனை விளக்க நாகய்யனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

மலையூர் என்ற ஊரில் மருதாசலம் என்ற பெரிய வியாபாரி இருந்தான். அவனுக்கு வியாபாரத்தில் நல்ல லாபம் கிடைத்தது. அவன் நேர்வழியில்தான் அதனை அடைந்தான். ஆனுல் அவன் தானம், தர்

வேதாளம் சொல்லும் கதை



மம் என்று ஒரு காசு கூடக்கொடுத் தது இல்லை.

மருதாசலத்திடம் நாகய்யன் என்பவன் வேலை பார்த்து வந்தான். அவன் மருதாசலத்தின் நம்பிக்கைக் குப் பாத்திரமானவன். அவன் தன் எஜமானன் இவ்வளவு பணம் சம் பாதித்தும் ஏன் ஒரு காசுகூட தான தர்மம் எனக்கொடுத்தது இல்லையே என்று ஆச்சரியப்பட்டான். அது பற்றி அவரிடம் பேசிப்பார்ப்பது என்றும் அவன் தீர்மானித்துக் கொண்டான். ஒருநாள் அவன் மருதா சலத்திற்குக் கால் பிடித்து விட்டுக் கொண்டிருக்கையில் அவனிடம் "ஐயா, ஒரு விஷயம் சொன்னால் கோபித்துக் கொள்ள மாட்டீர் களே" என்றான்.

அதைக் கேட்டு மருதாசலம் புன்னகை புரிந்து "நீ சொல்லப் போகும் விஷயம் கோபித்துக் கொள் ளக் கூடியதாக இருந்தால் கோபம் கொள்ளத்தான் கொள்வேன். அப்போது தானே நான் எஜமானன் என்று மார்தட்டிக் கூறமுடியும். சரி, விஷயத்தை சட்டென்று சொல்" என்றான்.

நாகய்யனும் "ஐயா, தங்களிடம் எவ்வளவோ பணம் இருக்கிறது. பிள்ளைகுட்டி என்றெல்லாம் இல்லை. அதனால் தானதர்மங் களைச் செய்து புண்ணியம் சம்பாதித் துக் கொள்ளக் கூடாதா?" என் றான். மருதாசலம் அதுகேட்டுச் சற்று நேரம் வரை யோசித்து விட்டு "நாகய்யா! உன்னிடம் பணம் இல்லாததால் தான் இப்படிப் பேசுகிறாய். உன்னிடமும் என்னிடம் உள்ளது போல ஏராளமாகப் பணம் இருந்தால் இப்படி எல்லாம் நினைக்க மாட்டாய். எப்போதும் தரித்திர நிலையில் உள்ளவனுக்குத்தான் தாராள புத்தி தோன்றும். ஏனென் றால் கொடுப்பதற்கு என்று அவ னிடம் எதுவும் இல்லையே. உனக்கு நான் பணம் கொடுத்தால் நீ அதனை உன் சொந்த உபயோகத்திற்குப் பயன்படுத்தாமல் முழுவதையும் தான தர்மங்களிலேயே செலவிட்டு விடுவாயா?" என்று கேட்டான்.

நாகய்யனும் "ஓ! செய்வேனே" எனவே மருதாசலமும் "சரி, உனக்கு

நூறு வராகன்கள் கொடுக்கிறேன். இதை நீ தானதர்மங்களில் செல விடு. ஆனால் ஒரு விஷயம். இந்த தானதர்மம் என் பணத்தால் நடக் கிறது என்று யாருக்கும் தெரியக் கூடாது. தெரிந்ததா?'' என்றான். நாகய்யனும் சரி எனத் தலையை ஆட்டவே மருதாசலம் அவனுக்கு நூறு வராகன்கள் கொடுத்தான்.

அது கோடைகாலம் ஆதலால் நாகய்யன் ஊரில் பல பகுதிகளில் தண்ணீர்ப் பந்தல்களை அமைத்து மண்பானைகளில் குளிர்ந்த நீர் நிரப்பி கேட்டவர்களுக்கு எல்லாம் இலவசமாக நீர் கொடுக்க ஏற்பாடு செய்தான். நீர் குடித்தவர்கள் எல் லாம் நாகப்பனை வாழ்த்திவிட்டுப் போனார்கள்.

நாகய்யன் தனக்காக ஒரு பைசா கூட எடுத்துக் கொள்ளாமல் எல் லாப் பணத்தையும் தண்ணீர்பந்தல் கள் அமைப்பதில் செலவு செய்தது கண்டு மருதாசலம் திருப்தி அடைந் தான்.

சில நாட்களுக்குப் பின் நாகய் யன் மருதாசலத்திடம் ''ஐயா! என்னிடம் பணம் மட்டும் இருந் தால் ஒரு சத்திரத்தைக் கட்டுவேன். வெளியூர்ப் பயணிகள் இவ்வூரில் தங்க இடமில்லாமல் கஷ்டப்படுகிறார் கள்'' என்றான். மருதாசலமும் ''நான் பணம் கொடுக்கிறேன். நீ சத்திரத்தைக்கட்டு. நீ கூறுகிறபடி வெளியூர் பயணிகள் கஷ்டப்படாமல்



நம் ஊரில் தங்கிவிட்டுப் போகட் டும். நானும் இதனைக் கவனித்தே வருகிறேன். ஆனால் நான் தான் பணம் கொடுத்தேன் என்பது யாருக் கும் தெரியவேண்டாம்'' என்று கூறி ஒரு பெருந்தொகையைக் கொடுத் தான்.

நாகய்யன் மூன்றே மாதங் களில் சத்திரத்தைக் கட்டி முடித் தான். வெளியூர்ப் பயணிகள் மட்டு மல்லாமல் அந்த ஊரில் இருக்க இடம் இல்லாதவர்கள் கூட அங்கு தங்கலானார்கள். அச்சத்திரத்திற் கும் நாகய்யன் சத்திரம் என்ற பெயரும் ஏற்பட்டு விட்டது.

சில நாட்களுக்குப் பின் நாகய்யன் மருதாசலத்திடம் ''இவ்வூர் சத் திரத்தில் தங்குபவர்களுக்கு உணவு



கிடைப்பதில்லை. என்னிடம் பணம் இருந்தால் தினமும் இரண்டு வேளைகளிலும் அங்கு வருபவர்களுக்கு எல்லாம் இலவசமாக சாப்பாடு போடுவேன்'' என்றான்.

மருதாசலம் சற்று யோசனை செய்து ''சரி, இதற்கும் நான் பணம் கொடுக்கிறேன். தாராளமாக அன்னதானம் செய். ஆனால் இதற்கும் நான் உதவுவதாக யாருக்கும் தெரியக் கூடாது'' என்றான்.

நாகய்யனும் சரி எனவே மருதாசலம் ''நான் உயிரோடு இருக்கும் வரை உனக்குப் பணம் கிடைக்கும் நான் இறந்த பின் என்ன செய்வாய்? உன்னால் தொடர்ந்து அன்னதானம் செய்ய முடியாதே'' என்றான். நாகய்யனும் ''ஐயா, முயன்றால் முடியாதது என்று எதுவுமே இல்லை. நான் மனம் தளரமாட்டேன். அது பற்றிப் பிறகு யோசித்தால் போயிற்று. இப்போது வீண் கவலைப்படுவானேன். அந்தநிலை வரும் போது நான் பார்த்துக் கொள்கிறேன்.'' என்றான்.

இதற்குச் சில மாதங்களுக்குப் பின் மருதாசலம் இறந்து விட்டான் அவன் இறக்கும் வரை நாகய்யனுக்குப் பணம் கொடுத்து வந்தான். நாகய்யனும் அதைக் கொண்டு தினம் இரண்டு வேளைகளிலும் அன்னதானம் செய்து பேரும் புகழும் பெற்றான். ஆனால் மருதாசலம் இறந்தபின் அவன் அன்னதானத்தை நிறுத்த வேண்டியதாயிற்று. ஏனெனில் அவனுக்குப் பணம் கிடைத்து வந்தது நின்று போயிற்றே!

நாகய்யன் தன்னிடம் பணம் இல்லாததால் அன்னதானத்தை நிறுத்திவிடப் போவதாக அறிவித்தான். அதனை மக்கள் நம்பவில்லை. அவனுக்குப் பணத்தாசை வந்து விட்டது என்றும் செலவு செய்ய ம்னம் இல்லை என்றும் கூறலானார்கள். சிலர் அவனை கருமி என்று திட்டினார்கள். வேறு சிலரோ அது வரை தாம் சுகமாக வாழ்ந்தது இனி இல்லை என்று கண்டு ஆத்திரம் அடைந்து அவனை அடித்தார்கள். அந்த அடிகளைத் தாங்க முடியாமல் நாகய்யன் அதே இடத்

தில் இறந்து விழுந்தான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி "நாகய்யனின் மரணத்திற்கு யார் காரணம்? மக்களா அல்லது மருதாசலமா? நீ இக்கேள்விக்குச் சரியான விடை தெரிந்திருந்தும் கூறுவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறுகிவிடும்" என்றது.

விக்கிரமனும் "மருதாசலம் நல்ல மனம் படைத்தவன். தனக்குப் பேரும் புகழும் வேண்டாம் என நினைத்தே அவன் நாகய்யனுக்குப் பணம் கொடுத்து வந்தான். தனது இந்தச் செயலையும் பகிரங்கப்படுத்திக் கொள்ளவில்லை. நாகய்யன் தன் எஜமானன் கொடுத்த பணத்தை அவர் சொல்லும் காரியத்திற்காகச் செலவிடக் கடமைப்பட்டவன். ஆனல் சத்திரத்தில் அன்னதானம் என்று வேலை வெட்டி இல்லாதவர்களுக்கு எல்லாம் அவன் அன்னதானம் செய்தான். அதனல் அவர்கள் முழுச்சோம்பேறிகளாகி விட்டார்கள். இப்படிப் பட்ட அன்னதானம் அர்த்தமற்றது. அந்தப்பணத்தால் அவர்களுக்கு வேலைகள் கொடுத்திருக்கலாம். ஆனல் பணஉதவி கிடைக்காமல் போய் அன்னதானத்தை நிறுத்தவே அதுநாள் வரை சாப்பிட்டவர்கள் ஆகாரம் கிடைக்காமல் ஆத்திரம் கொண்டு அவனை அடித்துக் கொன்றூர்கள். தானம் தர்மம் என்பதெல்லாம் ஒருவன் தன் சக்திக்கு உட்பட்டே செய்ய வேண்டும். நாகய்யன் தன் சக்திக்கு அப்பாற்பட்ட செயலைச் செய்து அதை திடீரென நிறுத்திவிட்டான். எனவே அவனது மரணத்திற்கு அவனேதான் காரணம் வேறு யாரும் இல்லை" என்றூன்.

விக்கிரமனின் இந்த சரியான பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக் கொண்டது.





# எது ஈடு?

ரங்கப்பன் வட்டிக் கடைக்காரன். அவனிடம் அவன் வசிக்கும் நல்லூர் வாசிகள் மட்டுமல்லாமல் சுற்றுப் புற ஊர்களிலும் உள்ளவர்கள் தம் தேவைக்கு ஏதாவது ஒரு பொருளை அடகு வைத்துப் பணம் வாங்கிப் போவார்கள். அவனது வட்டி விகிதமும் குறைந்ததே.

ஆனால் பணத்தை வசூல் செய்வதில் கறாராக இருப்பான். கடன் கொடுத்தால் அதனைத் திருப்பிக் கொடுக்கத்தக்க சக்தி இருக்கிறதா என்பதை அறிந்து கொண்ட பிறகே கடனைக் கொடுப்பான். அவனை யாராலும் ஏமாற்றிவிட முடியாது.

தங்கப்பனிடம் அடிக்கடிக் கடன் வாங்கிப் போகிறவன் செல்லப்பன் என்ற குடியானவன். அவன் ஒவ்வொரு முறையிலும் தன்னிடமுள்ள தங்கக் கட்டைக் காப்பை அடகு வைத்துப் பணம் வாங்கிப் போவான். அந்தக் கடனை அடைத்து அந்தக் காப்பை மீட்ட பிறகே மறுபடியும் கடன் கேட்டு அதே காப்பை அடகு வைப்பான். ஏழை விவசாயி ஆனதால் அவனுக்குப் பயிர் செய்ய அடிக்கடிப் பணம் தேவைப்பட்டது.

ஒரு முறை செல்லப்பன் தன் காப்பை தங்கப்பனிடம் அடகு வைத்துப் பணம் கேட்டபோது அவ்வூர் பொற்கொல்லன் பொன்னுசாமி அங்கே இருந்தான். தங்கப்பன் காப்பை வாங்கிக் கொண்டு அதற்கு ஐம்பது வராகன்கள் கொடுத்து அனுப்பியதை அவன் பார்த்தான். செல்லப்பன் போனதும் அந்தக் காப்பை வாங்கிப் பார்த்து விட்டு அது நல்ல தங்கத்தில் செய்யப்பட்டது அல்ல என்றும் சரிபாதி பித்தளை சேர்க்கப்பட்டது என்றும்

-சுதா கிருஷ்ணசாமி-

கண்டான். அது பத்து வராகன்களே பெறும் என மதிப்பிட்டான்.

எல்லோரிடமும் கறாராகப் பேசும் தங்கப்பன் செல்லப்பனிடம் ஏமாந்து விட்டானே எனப் பொன்னுசாமி நினைத்தான். தங்கப்பனுக்கு தங்கம் பற்றி எதுவுமே தெரியாது எனவும் அவன் நினைத்து விட்டான்.

ஒரு மாதத்திற்குப் பின் பித்தளை நகைகளை பொன்னுசாமி செய்து அவற்றிற்குத் தங்க முலாம் பூசினன். பிறகு அவன் அந்த நகைகளைத் தங்கப்பனிடம் எடுத்துப் போய் "ஐயா! என் மகளுக்குக் கல்யாணம் திடீரென நிச்சயமாகி விட்டது. எனக்கு உடனடியாக ஆயிரம் வராகன்கள் தேவைப்படுகிறது. ஐயாயிரம் வராகன்கள் பெறுமான இந்த நகைகளை ஈடாக வைத்துக் கொண்டு எனக்குப் பணம் கொடுத்து உதவுங்கள்" என்ருன்.

தங்கப்பனும் அப்படியா? ஈடாக இந்த நகைகளைக் கொடுக்கப் போகிருயா? சரி. அதன் மதிப்பு என்ன என்று பார்த்துவிட்டுச் சொல்கிறேன். நகைகளைக் கொடு" என்ருன். பொன்னுசாமியும் நகைகளை அவனிடம் கொடுத்தான்.

தங்கப்பனும் அந்த நகைகளை வாங்கிப் பார்த்து விட்டு "பொன்னுசாமி! நீயோ பொற்கொல்லன். உனக்குக் கூடவா அசல் தங்க நகைகளுக்கும் போலி நகைகளுக்குமுள்ள வித்தியாசம் தெரியாது?



இவை எல்லாம் தங்கமுலாம் பூசிய நகைகள். இவற்றின் மதிப்பு பத்து வராகன் கூடத் தேராது. என்னை ஏமாற்ற முடியாது" என்ருன்.

அதைக் கேட்டு பொன்னுசாமி ஆச்சரியப்பட்டான். தான் நினைத்ததுபோல தங்கப்பனுக்கு தங்கம் பற்றி எதுவும் தெரியாது என்பது சரியல்ல என்று அவன் தெரிந்து கொண்டான். அதுபற்றி மேலும் விவரமாய் அறிய அவன் மனம் விரும்பியது.

பொன்னுசாமி தலை குனிந்தவாறே "ஐயா! இதே ஊரில் உள்ள நான் உங்களை ஏமாற்றுவேனு? ஆனல் நீங்கள் மகாமட்டமான தங்கத்தால் செய்யப்பட்ட செல்லப்பனின் தங்கக் கட்டைக் காப்பிற்கு

மட்டும் ஐம்பது வராகன்கள் கொடுத் தீர்களே. அது பத்து வராகன்தானே பெறும்'' என்ருன்.

அப்போது தங்கப்பன் பலமாகச் சிரித்து "ஓஹோ! நீ அன்று அந்தக் காப்பை வாங்கி பார்த்தது நினை விற்கு வருகிறது. அதைக் கொண்டு எனக்குத் தங்கத்தைப் பரீட்சிக்கத் தெரியாது என்று முடிவு கட்டி விட்டாயா? செல்லப்பன் நேர்மை யானவன். அவன் அந்தக் காப்பு அசல் தங்கத்தால் ஆனது என எண்ணிக் கொண்டிருக்கிருன். ஆஞல் அதில் சரிபாதி பித்தளை கலந்திருக்கிறது என்று எனக்குத் தெரியும். அந்தக் காப்பை செய்து கொடுத்தவனும் நீதான் என்பதும் எனக்குத் தெரியும். அவனிடம் அது நல்ல தங்கக்காப்பு அல்ல என்று நான் மட்டும் கூறிவிட்டால் அவன் தன் தேவைக்குக் கடன் வாங்க என்னிடம் வரமாட்டான். வேறு யாரும் அவனுக்கு அதன் பேரில் கடன் கொடுக்க மாட்டார்கள். அவ னிடம் உள்ள ஒரே விலையுயர்ந்த பொருள் அந்தத் தங்கக் காப்புதான். அவன் அதைச் சுத்தத் தங்கம் என்றே நினைத்துக் கொண்டிருக்கிருன். அவன் நம்பிக்கையைத் தகர்க்க வேண்டாம் என்றும் அவன் ஏமாந் ததைக் கூற வேண்டாம் என்றும் நேர்மையுடன் நடந்து வரும் அவனுக்கு உதவ வேண்டும் என்ற நோக்கம் தான் எனக்கு. அதஞல் தான் பத்து வராகன்கள்கூடப்பெருத அவனது அந்தக் காப்புக்கு ஐம்பது வராகன் கள் கொடுக்கிறேன்'' என்ருன்.

அதைக் கேட்ட பொன்னுசாமி திகைத்துப் போஞன். ஏனெனில் இதுவரை செல்லப்பனை ஈவுஇரக் கம் இல்லாது வட்டி வாங்குபவன் என்று நினைத்திருந்தான். பண விஷ யத்தில் கருராக நடந்து கொள்ளும் தங்கப்பனுக்கு இவ்வளவு நல்ல குணமா என எண்ணியவாறே தன் போலி நகைகளை எடுத்துக் கொண்டு பொன்னுசாமி அங்கிருந்து சென்ருன்.



# மகான்கள் கனவு கண்ட பாரத நாடு

## விழித்து எழுங்கள்!

மக்களால் அன்புடன் நேதாஜீ என அழைக்கப்படும் சுபாஷ் சந்திர போஸ் 1897 ஜூலையில் பிறந்தார். 1920ல் லண்டனில் ஐ. சி. எஸ். பரீட்சையில் தேர்ந்ததும் அவர் அரசாங்க அதிகாரியாகப் பதவி ஏற்காமல் இந்திய தேசீய காங்கிரஸில் சேர்ந்து நாட்டின் விடுதலைக்காகப் பாடு பட்டார். இவரது தீவிரவாதப் போக்கைக் கண்டு பிரிட்டிஷ் அரசாங்கம் இவரை வீட்டுக்குள்ளேயே சிறை வைத்தது. ஆனால் 1941ல் அக்காவல் கண்காணிப்பிலிருந்து தப்பி வெளியேறிக் காபுல் வழியாக ஜெர்மனியை அடைந்தார். மலேயாவில் அவர் இந்திய தேசீய இராணுவப் படையை நிறுவி நம் நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட்டார். அச்சமயம் அவர் கூறியதாவது:

"நாட்டுப் பணியைத் தம் கடமையாகக் கருதி இளைஞர் சமுதாயம் முன் வந்து செயல்பட வேண்டும். பாரதமாதாவின் அழைப்பு உங்கள் காது களில் விழவில்லையா? இன்னமும் உறங்கிக் கொண்டிருப்பது சரியல்ல. உடனே விழித்து எழுந்து செயலில் இறங்குங்கள். பதினெட்டாம் நூற் றூண்டில் நம் தாத்தாக்கள் வியாபாரிகளாக வந்த ஆங்கிலேயர்களை அனு மதித்ததன் வாயிலாகப் புரிந்த பாவத்தை நாம் போக்க வேண்டும். விழிப் புணர்ச்சி பெற்ற பாரதம் விடுதலைக்காக அழைப்பு விடுக்கிறது. பாரத மக்கள் அனைவரும் ஒன்ருக நாட்டின் விடுதலைக்காகப் போராட வேண் டும். நாம் இழந்த புகழையும் பெருமையையும் மீட்டு நிலைநாட்ட வேண்டும்."

## உங்களுக்குத் தெரியுமா?

1. மெட்ரிக் முறையை முதன் முதலாகக் கையாண்ட நாடு எது?
2. சக்கரவர்த்தி அலெக்ஜாண்டருக்கு அவரது இளமைப் பருவத்தில் ஒரு குதிரை கொடுக்கப்பட்டது. அதன் பெயர் என்ன?
3. 'ஜூடோ' எனப்படும் தற்காப்பு முறையை உருவாக்கியவர் யார்? அது எப்போது?
4. ஆரோக்கிய நிலயம் எனப்படும் நாடு எது? அதன் சிறப்பு என்ன?

(விடைகள் 36ம் பக்கத்தில்)



# இராமர்

இராமாயணம் உலகப் புகழ்பெற்றது. இதில் பகவான் மகாவிஷ்ணு இராமராக அவதரித்து இராவணனைக் கொன்றது விவரிக்கப்பட்டுள்ளது. வால்மீகி முனிவர் சம்ஸ்கிருத மொழியில் இராமாயணத்தைப் படைத்தார்.

விஷ்ணு பகவான் எடுத்த அவதாரங்களில் ஏழாவது இராமாவதாரம். இராமர் எல்லா விதத்திலும் ஒரு ஆதர்ச மனிதராக வாழ்ந்து பரம்பரை பரம்பரையாக பாரதவாசிகளுக்கு வழிகாட்டியாக விளங்கி வருகிறார். சிறு வயது முதலே பெரியோரிடம் மரியாதை செலுத்தியவர். இளம் வயதிலேயே அரக்கர்களைக் கொன்று மக்களை சந்தோஷமாக வாழச் செய்தவர். தந்தை சொற்படி நாட்டைத் துறந்து காட்டில் போய் வாழ்ந்து தந்தை சொல்மிக்க மந்திரம் இல்லை என்று மக்களுக்கு எடுத்துக் காட்டியவர். சகோதரர்கள் எப்படி இருக்க வேண்டும் என்பதை இராமரும் இலட்சுமணனும், கணவன் மனைவி எப்படி இருக்க வேண்டும் என்பதை

இராமரும் சீதையும் தம் செய்கையில் காட்டி நாட்டு மக்களும் அவ்வாறு இருக்க வேண்டும் என வழிகாட்டி யுள்ளார்கள். வானரப்படையின் உதவி யால் மிக்க பலசாலியான இராவ ணனைக் கொன்று வெற்றிவாகை சூடியவர் இராமர்.

மன்னனாகி அவர் மக்களிடம் காட் டிய பரிவு, மக்கள் அபிப்பிராயத் திற்கு அவர் அளித்த மதிப்பு ஈடு இணை யற்றது. இக்காரணங்களால் இமயம் முதல் குமரி வரை இராமரை இலட்சு மணனோடும் பரத சத்ருக்னரோடும் சீதையோடும் அனுமாரோடும் சேர்த்து யாவரும் தெய்வமாக வழிபட்டு வரு கிறார்கள்.

# அம்புலிமாமா செய்திகள்

## வேகமாகச் சாய்ந்து வரும் கோபுரம்

உலக அதிசயங்களில் ஒன்றாய் இத்தாலி யில் இத்தாலியில் பிசா நகரின் கோபுரம் 1991ல் முதல் மூன்று மாதங்களில் 1.1 மி.மீட்டர் சாய்ந்த விட்டது. இதற்கு முன் இக்கோபுரம் 1918லிருந்து ஆண் டிற்கு 1,91 மி.மீட்டர் வீதம் சாய்ந்து கொண்டே வந்ததாம். இதுவரை இந்த கோபுரம் நான்கு மீட்டர் சாய்ந்துள்ளது என ஆய்வாளர்கள் கண்டுபிடித்துள் ளார்கள்.







## பிறந்த நாள் பரிசு

திரவப் படிகங்கள் பற்றி ஆராய்ந்து முடிவுகளைக் கண்ட பிரபல விஞ்ஞானி டாக்டர் சந்திரசேகர் இந்த ஆண்டு ஜூனில் 60 வயதை தாண்டி விட்டார். அவரது பிறந்த நாளன்று அமெரிக்கா விலுள்ள மாசெசட்ஸ் இன்ஸ்ட்டியூட் ஆப் டெக்னலஜி என்ற நிறுவனத்தில் ஒரு மாபெரும் கூட்டம் நடைபெற்று அவர் கௌரவிக்கப்பட்டார். அக்கூட்டத் தில் உலகின் புகழ்பெற்ற விஞ்ஞானிகள் நூறு பேர்கள் வந்து கலந்து கொண்டு வாழ்த்தினார்கள்.

# இலக்கிய உலகம்

1. மனிதர்களைப் போல அறிவும் ஆற்றலும் கொண்ட ஒரு குதிரை பற்றி ஒரு ஆங்கில நூலில் கூறப்பட்டுள்ளது? அந்த நூல் எது?
2. அஸ்ஸாமின் மிகப் பழைய நூல் எது?
3. விமான ஓட்டியாக இருந்து இலக்கியப் படைப்பாளராக மாறிய ஒருவர் ஒரு உயரிய படைப்பை அளித்தார். அவர் யார்? அந் நூலின் பெயர் என்ன?
4. புகழ்பெற்ற இரு ஆங்கிலக் கவிஞர்கள் ஒரே ஆண்டில் பிறந்தவர் கள். அவர்கள் யார்? எந்த ஆண்டில்பிறந்தார்கள்?
5. தாகூரின் கீதாஞ்சலி 1913ல் இங்கிலாந்தில் பிரசுரிக்கப்பட்டது. அதற்கு முகவுரை எழுதியவர் யார்?

## விடைகள்

### உங்களுக்குத் தெரியுமா?

1. பிரான்ஸ்.
2. பூஸ்வெலஸ்
3. டாக்டர் ஜுகோலோ காவோ 1883ல்.
4. நியூஜிலாந்து. தன் விலை யுயர்ந்த பொருள்களை அதிக விலைக்கு விற்று அப் பணத்தை ஏழை எளியவர் களுக்கு வைத்தியம் செய்ய ஆரோக்கிய நிலையங்களுக் குப் பகிர்ந்து கொடுக்கிறது.

### இலக்கியம்

1. கலிவர்ஸ் ட்ராவல்ஸ்
2. கோஜிகிக். அஸ்ஸாம் வரலாற்றைக் கூறும் நூல்.
3. ஆண்டோனி சென்ட் ஆக்சு வரி. விண்ட், சாண்ட் அண்டு ஸ்டார்ஸ்.
4. லார்ட் டென்னிசன், எட் கார் ஆலன்போ. 1809ல்.
5. டபிள்யூ. பி. ஈ. ட்ஸ்.



# இரு மரங்களின் இரகசியம்

ஒரு பள்ளத்தாக்கில் ஒரு அழகிய கிராமம் இருந்தது. ஒரு காலத்தில் அந்தப் பள்ளத்தாக்கு இருந்த இடத்தில் ஒரு ஏரி இருந்தது. அந்த ஏரி வறண்டு விடவே அங்கு அந்த கிராமம் ஏற்பட்டது. அக்கிராமத்தவர் பயிர் செய்து அமோக விளைச்சலை அடைந்தனர்.

அக்கிராம எல்லையில் பிலமோன் என்ற கிழவன் வாழ்ந்து வந்தான். அவன் மனைவி பௌசி, அவர்கள் ஏழைகளாயினும் உழைத்து திராட்சையைப் பயிர் செய்தனர். அதிலிருந்து கிடைத்த வருமானம் அவர்களது இரண்டு வேளைச் சாப்பாட்டிற்கு மட்டுமே போதுமானதாக இருந்தது.





ஒருநாள் அவர்கள் அக்கிராமத்து நாய்கள் குரைப்பதையும் சிறுவர் சிறுமியர் கூச்சலிடுவதையும் கேட்டனர். இப்படி நடந்தால் அந்த கிராமத்திற்கு யாரோ புதியவன் வந்திருக்கிறான் என்றும் அவனைத் துரத்த கிராமத்தவர் நாய்களையும் சிறுவர்களையும் ஏவிவிட்டிருக்கிறார்கள் என்பதாகும்.



பிலமோனும் பௌசியும் அக்கிராமத்திற்கு வந்த புதியவர்களைத் தம் வீட்டில் வரவேற்ருர்கள். அக்கிராமத்தவரின் அடாத செயலுக்காக அவர்களிடம் மன்னிப்புக் கேட்டு அத்தம்பதிகள் ஆறுதலும் கூறினுர்கள்.

அவர்கள் தம்மிடமிருந்த கொஞ்சம் பாலையும் சிறு ரொட்டித் துண்டையும் அவர்களின் முன் வைத்தார்கள். அவர்கள் தமக்குக் கொடுக்கப்பட்ட பாலைக் குடித்துவிட்டு "இன்னும் கொஞ்சம் பால் இருந்தால் கொடுங்கள்" என்று கேட்டார்கள்.





பௌசியோ "இல்லையே. இதோ பாருங்கள்" என்று கூறிப் பால்ப்பாத்திரத்தைக் காட்டினுள். அப்போது அவர்களின் ஒருவன் "அதோ ஒரு சொட்டு பால் இருக்கிறதே. அதுபோதும். அதைக் கோப்பையில் ஊற்றுங்கள்" என்ருன். பௌசியும் பாத்திரத்தைக் கவிழ்த்தாள். ஆனுல் என்ன ஆச்சரியம்! அந்தக் கோப்பையில் பால் நிறைந்து விட்டது.

அப்போது அவர்கள் "நீங்களும் கோப்பைகளில் பாலே நிரப்பி எங்களோடு சேர்ந்து குடியுங்கள்" என்றனர். பௌசி அப்பாத்திரத்தை வேறு கோப்பைகளில் கவிழ்க்கப் பால் வந்து கொண்டே இருந்தது. அவர்கள் ரொட்டியை விள்ள விள்ள அதுவும் சற்றும் குறையாமல் அப்படியே இருந்தது.





புதியவர்கள் அன்றிரவு அத்தம்பதிகளின் வீட்டில் தங்கிவிட்டு மறுநாள் காலே புறப்பட்டனர். அத்தம்பதிகள் அவர்களே வழி அனுப்பி வைக்கக் கூடவே சென்ருர்கள்.

அப்போது பிலமோனும் பௌசியும் அந்த கிராமமே அழிந்து போனதைக் கண்டார்கள். அந்த இடத்தில் ஒரு பெரிய ஏரி இருப்பதையும் பார்த்தார்கள். அந்தப் புதியவர்கள் "இந்தக் கிராமத்தவருக்கு இங்கு வசிக்க தகுதி இல்லே. அதனுல்தான் முன்பு இங்கு இருந்த ஏரி மீண்டும் வந்து அக்கிராமத்தை அழிந்து விட்டது" என்ருர்கள்.





அவர்கள் அத்தம்பதிகளைத் திரும்பிப் பார்க்கச் சொன்னார்கள். அவர்களது சிறிய குடிசைக்கு பதிலாக ஒரு மாளிகை இருப்பதை அக்கிழ தம்பதிகள் கண்டனர். "நீங்கள் இங்கு வருபவர்களை உபசரிப்பதால் இந்தப் பெரிய மாளிகை உங்களுக்கு தேவை" என அத்தம்பதிகளிடம் கூறி அவர்கள் திடீரென மறைந்து விட்டார்கள்.

அவர்களது பால் பாத்திரம் பாலைக் கொடுத்துக் கொண்டே வந்தது. ரொட்டியோ எடுக்க எடுக்கக் குறையாமல் இருந்தது. அதனால் அவ்வழியே செல்லும் பயணிகளை அத்தம்பதிகள் நன்கு உபசரித்தனர். அவர்களது திராட்சை ரசம் புகழ் பெறலாயிற்று. வயதான போதிலும் அக்கிழ தம்பதிகள் பயணிகளைத் தங்க வைத்து உணவளிப்பதில் சோர்வே அடையவில்லை.





அந்த ஏரியைச் சுற்றி ஒரு புதிய கிராமம் ஏற்பட்டது. அந்த கிராமத்தவர் பிலமோனையும் பௌசியையும் மரியாதையுடன் கௌரவமாக மதித்து வந்தார்கள். அவர்கள் ஜீவகாருண்யம் கருதி ஏரியிலுள்ள மீன்களைப் பிடித்துத் தின்னவில்லை. ஒருநாள் அக்கிழ தம்பதிகள் தென்படவில்லை. அவர்கள் இருவரும் இரு பெரிய மரங்களாகி அவ்வழியே வரும் பயணிகளுக்குக் குளிர்ந்த நிழலைத் தந்தனர்.



# கருணை காட்டு!

பொன்னூரில் தனபாலன் என்ற பணக்காரன் இருந்தான். அவன் பலவிதத்திலும் பணம் சேர்த்து ஊரில் பெரிய மனிதன் என்ற பெயர் பெற்று விட்டான். ஆனால் அவனைப் புகழ்வோர் யாரும் இல்லை.

அவனைக் காண அவனது உறவினரான தயாநிதி அவனது ஊருக்கு வந்தார். அவர் நற்குணங்கள் கொண்டவர். பிறருக்கு இரக்கம் காட்டுபவர். பிறர் குற்றங்களை மன்னிப்பவர். அது மட்டுமல்ல. தம் கைப்பொருளை எல்லாம் பிறருக்கு உதவவே செலவு செய்தும் வந்தார். இதனால் அவரது புகழ் நாடெங்கும் பரவி இருந்தது.

தம் ஊருக்குப் புகழ்பெற்ற பெரியவர் ஒருவர் வந்திருக்கிறார் என்று கேட்டதும் மக்கள் திரள்திரளாக அவரைக் காண தனபாலனின் வீட்டிற்கு வந்தார்கள். அவரும் எல்லோருடனும் சிரித்துப் பேசி அவர்களைச் சந்தோஷப்படுத்தி அனுப்பினார்.

இதைக்கண்ட தனபாலன் தயாநிதி மீது பொறாமை கொண்டான். அவன் ஒருநாள் அவரிடம் "மக்கள் உங்களைப் பார்க்க ஏன் இப்படி முண்டி அடித்துக் கொண்டு வருகிறார்கள்?" என்று கேட்டான்.

தயாநிதியும் "இவ்வுலகில் பணத்தை எப்படியாவது சம்பாதித்து விடலாம். இப்படி சம்பாதிக்க ஒருவன் சுயநலக்காரனாக இருக்க வேண்டும். பணத்தால் அவனால் எல்லா வசதிகளையும் பெற முடியுமே யொழிய புகழைப் பெற முடியாது. மனிதன் பிறப்பால் இரக்கம் கொள்ள வேண்டும். பிறர் கஷ்டப் படுவதைக் கண்டு கைகட்டிக் கொண்டு இருக்கக்கூடாது. இரக்க

—பாபநாசம் சாமா—




அடைய வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. அதற்காக என்ன செய்ய லாம் என யோசித்தான். முடிவில் அவனுக்கு ஒரு வழி தோன்றியது.

அதே ஊரில் சின்னன் என்ற ஏழை இருந்தான். அவன் பல திருட்டுக்களைச் செய்தவன். அவனை தனபாலன் கூப்பிட்டு "சின்னு! நான் உனக்குப் பண உதவி செய் கிறேன். நீ இதுவரை திருடி வந்த தால் உன்னை யாரும் வேலைக்கு வைத்துக் கொள்ளவில்லை. நான் உன்னை வேலைக்கு வைத்துக் கொண்டு சம்பளம் கொடுக்கிறேன். ஆனால் நீ நான் சொல்கிறபடிச் செய்ய வேண்டும்" என்றான்.

சின்னனும் அவன் கூறியபடி நடப்பதாகக் கூறவே தனபாலனும் "நீ என் வீட்டிற்குத் திருட வரு கிறாய். இரும்புப் பெட்டி சாவியை நான் கொடுக்கிறேன். நீ அந்த அறையைக் காவல் காக்கும் வீரய் யன் கண்ணில் படாமல் அந்த அறைக்குள் போய் இரும்புப் பெட் டியை திறக்கிறாய். அப்போது வீரய்யன் உன்னைப் பிடிப்பான். அச்சமயம் நான் அங்கு வந்து உன்னை மன்னிப்பதாயும் உன்னை என்னிடமே வேலைக்கும் வைத்துக் கொள்வதாகவும் கூறுவேன். இதை ஊரார் கேட்டு என்னைப் பாராட்டுவார்கள். இது கேட்டு மற்ற திருடர்களும் திருந்துவார் கள்" என்றான்.

இயல்புடையவன் தன் எதிரியை யும் நேசிப்பான். பிறருக்கு இரக் கம் காட்டியே நான் என் பணத்தை எல்லாம் செலவு செய்து விட் டேன். எனக்கு எதிரி என்று எவ ரும் இல்லை. இரக்கப்படுபவனைப் பற்றி யாவரும் பிறரிடம் புகழ்ந்து கூறுகிறார்கள். இதனால் பலர் நேர் வழிப்படுகிறார்கள். இந்த மனப் பான்மை கொண்டு நான் எங்கும் போய் என்னாலான உதவி புரிந்து வருகிறேன்" என்றார்.

தயாநிதி அவ்வூரில் ஒருவாரம் இருந்து தினமும் சொற்பொழிவு கள் ஆற்றினார். அதன் பிறகு அவர் அவ்வூரை விட்டுச் சென்றார். அப் போது தனபாலனுக்குத் தானும் தயாநிதி போலப் பேரும் புகழும்

சின்னனும் அத்திட்டத்தின்படி சிரமப்படாமல் இரும்புப் பெட்டி யுள்ள அறைக்கு தனபாலனின் உதவியால் யார் கண்ணிலும் படா மல் சென்றுவிட்டான். அவன் வேண்டுமென்றே கொத்து சாவியை ஆட்டிச் சத்தம் செய்து இரும்புப் பெட்டியையும் திறக்கலானுன். சத்தம் கேட்டு வீரய்யன் விழித்து அவ்வீட்டுக் காவலே மீறி தனக்கும் தெரியாமல் அந்த அறைக்குள் வந்தவன் யார் எனக் கதவின் மறைவில் நின்று பார்த்தான்.

சின்னுன் இரும்புப் பெட் டியைத் திறந்து அதிலுள்ள நகை கள், பணம் எல்லாம் பார்த்ததும் மலேத்துப் போனுன். வீரய்யனும் அவற்றைக் கண்டு திகைத்தான். ஆனுல் அவன் சின்னுனேப் பிடித் துக் கொண்டு "டேய்! நீ எப்படியோ இங்கு வந்து விட்டாய். இதோ பார்! இதில் பாதியை எனக்குக் கொடுத்தால் உன்னே மீதிப்பாதி யுடன் பத்திரமாக வெளியே கொண்டு போய்விட்டு நீ தப்பிப் போக உதவுகிறேன். அதன் பிறகு நான் இங்கு வந்து மயக்க மருந்து சாப் பிட்டுப் படுத்துக் கிடக்கிறேன். இதற்குச் சம்மதிக்கிருயா?" என்று கேட்டான்.

இந்த திடீர்த் திருப்பம் சின்னு னேக் குழப்பியது. அவன் வீரய்ய னிடம் "பணத்தைப் பார்த்ததும் மனிதனின் புத்தி எப்படி மாறும்



என்பதை நீ காட்டி விட்டாய். இது உன் எஜமானனுக்குத் தெரிந் தால் உன் வேலே போய் நீ தெரு வில் நிற்க வேண்டி வரும். அத ஞல் இந்தத் திருட்டுப் புத்தியை விட்டுவிடு. உன்னே நான் உன் எஜமானனிடம் காட்டிக் கொடுக்க மாட்டேன். உன் தவறை மன்னித்து இரக்கமும் காட்டுகிறேன்" என் ருன்.

வீரய்யன் மறுவிஞடியே சின்னு னின் காலடியில் விழுந்து "என்னே மன்னித்தது சரி. நீ எப்படி இங்கு வந்தாய்?" எனக் கேட்கவே சின்னுன் தான் தனபாலனின் உதவி யால் அங்கு வந்ததைக் கூறித் தன்னேப் பிடித்துக் கொண்டு போய் தனபாலனிடம் ஒப்படைக்

கும்படிக் கூறினன்.

தனபாலன் சின்னனிடம் சாவியைக் கொடுத்ததிலிருந்து அவன் என்ன செய்கிருன் என மறைந்திருந்து கவனித்தான். அவன் வீரய்யனிடம் பேசியதைக் கேட்டு ஆச்சரியப்பட்டான். சின்னனை வீரய்யன் பிடித்துச் செல்லும் போது அவன் அவர்கள் எதிரே வந்தான். வீரய்யன் சின்னனை தனபாலனிடம் ஒப்படைக்கவே அவனும் வீரய்யனைப் போகச் சொல்லிவிட்டு சின்னனிடம் "நீ பேசியதை எல்லாம் கேட்டேன். வீரய்யனின் மனதில் திருட ஆசை ஏற்பட்டதும் நீ அதைப் போக்கி அவன் தவறை மன்னித்தாய். நீயே பார். நேராக சிந்திக்கும் உன்னை திருடன் என்றும் திருட நினைத்த வீரய்யனை காவல் காக்க ஏற்றவன் என்றும் நான் எண்ணியது தவறு. உனக்கு அந்த வேலையை கொடுத்து அவனை வேலையிலிருந்து நீக்கி விடுகிறேன்" என்றுன்.

சின்னனே "வேண்டாம். நான் திருடன் என்ற பெயர் பெற்றதால் எங்கும் வேலை கிடைக்கவில்லை. வீரய்யன் இதுவரை திருடவில்லை. அவன் திருட எண்ணியது இதுவே முதல் தடவை. அவனுக்குத் திருடன் என்ற பெயர் ஏற்பட்டு விட்டால் அவனும் என்னைப் போலத் திண்டாடத்தானே வேண்டும்? அதனுல்தான் அவன் தவறை மன்னித்துத் திருத்த முயன்றேன். அவன் நல்லவனே!" என்றுன்.

தனபாலனும் "ஆகா! ஒரு திருடனுகிய நீயே பிறருக்கு இரக்கம் காட்டுவதென்றுல் நான் ஏன் அவ்விதம் செய்யக்கூடாது? இன்று முதல் நானும் மாறி விட்டேன். பிறருக்கு இரங்கி உதவுவேன். முதலில் உன்னை வேலைக்கு வைத்துக் கொள்கிறேன்" என்றுன்.

இதற்குப் பிறகு தனபாலன் பிறரிடம் இரக்கம் காட்டி உதவி தயாநிதியைப் போலப் பேரும் புகழும் பெற்றுன்.






அனுமார் சீதையிடம் "தேவி! நான் இராமரின் தூதனாகத் தங்களிடம் வந்திருக்கிறேன். இராமரும் இலட்சுமணனும் க்ஷேமமாக இருக்கிறார்கள். இதைத் தங்களிடம் கூறச் சொன்னார்கள்" என்றார்.

இராமரும் இலட்சுமணனும் சௌக்கியம் எனக்கேட்டு சீதை மகிழ்ந்தாள். ஆனால் அனுமார் தன்னை நோக்கி வருவதுகண்டு இராவணன் தான் அவ்வுருவில் வருகிறானோ என்று சந்தேகப்படலானாள். அதனால் அவள் தான் பிடித்திருந்த மரக்கிளையை விட்டு விட்டுத் தரைமீது வீழ்ந்தாள்.

தன்னை சீதை சந்தேகிப்பதோடு பயப்படவும் செய்கிறாள் என்று கண்ட அனுமார் அவளை வணங்கினார். ஆனால் சீதையோ அவரைப் பாராமலே "நீ மட்டும் இராவணனாக இருந்தால் ஏன் இப்படிக் குரங்காக வந்து என்னை துன்புறுத்துகிறாய்? நான் ஜனஸ்தானத்தில் இருந்தபோது சன்னியாசியாக வந்தாய். நீ உண்மையிலேயே என் கணவரின் தூதன் என்றால் அவரது குணாதிசயங்களைக் கூறு பார்க்கலாம்" என்றாள்.

அப்போது அனுமார் இராமரின் கணையாழியை எடுத்துக் கொடுத்தார். அம்மோதிரத்தை சீதை பார்த்துக் கொண்டிருக்கும் போது அனுமார் இராமரின் குணாதிசயங்களை விவரித்தார். பிறகு அவர்தான் இலங்கைக்கு வந்த விவரத்தைக் கூறினார். இராமருக்கும் சுக்கிரீவனுக்கும் ஏற்

—அசோகவன அழிப்பு—



பட்ட நட்பைக் கூறினார். அதன் பிறகு தானும் மற்ற வானரர்களும் சீதையைத் தேடிக் கண்டுபிடிக்கக் கிளம்பியதைக் கூறினார்.

அதை எல்லாம் கேட்டு சீதை கண்ணீர் வடித்தாள். அவளுக்கு அனுமார் மீது நம்பிக்கை ஏற்பட்டது. அப்போது அனுமார் "நான் தங்களைப் பார்த்தாகிவிட்டது. இனி நான் என்ன செய்ய வேண்டும் என்பதைக் கூறுங்கள். நான் விரைவில் இங்கிருந்து போக வேண்டும். என்னை அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள்" என்றார்.

சீதையும் "அனுமானே! கடல் கடந்து வந்த உங்கள் சக்தியே அபாரம். இராவணன் கொடுத்த கெடு ஒரு வருடம். அதற்குள் என் கணவரை இங்கே வரச்சொல்லுங்கள். இராவணனின் தம்பி விபீஷணன் அவனுக்கு புத்திமதி கூறியும் அவன் கேட்கவில்லையாம்" என்றாள்.

அனுமாரும் "அப்படியா? இராட்சஸர்களிலும் நல்லவர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். அந்த அறிவுரைகளால் இராவணன் திருந்தவில்லை என்பது தெரிகிறதே!" என்றார்.

சீதையும் "ஆம். அப்படி ஒருவர் இருக்கிறார். அவரைப் பற்றி அவரது மகள் திரிசடை என்னிடம் கூறினாள்" என்றாள்.

அனுமாரும் "நான் போய் இராமரிடம் தங்களைக் கண்டது பற்றிக் கூறினால் உடனே அவர் வானரப் படைகளுடன் கிளம்பி இங்கு வந்து விடுவார். நீங்கள் இப்போதே இராமரிடம் போய்ச் சேர விரும்பினால் என் முதுகின் மீது அமர்ந்து கொள்ளுங்கள். நான் உங்களைக் கொண்டு போகிறேன்." என்றார்.

அப்போது சீதை "இல்லை. நான் உங்களோடு வரமுடியாது. என் கணவர்தாம் இங்கு வந்து என்னை மீட்டுச் செல்ல வேண்டும். உங்கள் முதுகின் மீது நான் ஏறி அமர்வது நான் அன்னிய புருஷனைத் தொடுவதாகும். இராவணன் கூட என்னைத் தொடாமல் நிலத்தோடு பெயர்த்து எடுத்தே தன் விமானத்தில் வைத்து இங்கு கொண்டு வந்தான். அது சரி, உங்கள் உருவமோ மிகச்சிறியதாக இருக்கிறது. பெரிய வேலைகளை

எல்லாம் உங்களால் எப்படிச் செய்ய முடிகிறது?'' என்று ஆச் சரியத்துடன் கேட்டாள்.

அனுமாரும் "என் சக்தி பற்றி நீங்கள் அறியவில்லை. இதோ பாருங்கள்'' எனக்கூறிச் சற்று தூரத்தில் போய் நின்ருர். அதன் பிறகு அவர்தம் உருவத்தைப் பெரி தாக்கலானுர். மலைபோன்ற உடலும், சிவந்த முகமும், பற்களும் நகங் களும் கொண்ட அவரது பயங் கரத் தோற்றம் கண்டு சீதை "இவ ரால் முடியாதது எதுவும் இல்லை. இலங்கையையே பெயர்த்துக் கொண்டு போகச்சொன்னுல் கூட அதைச் செய்து விடுவார் போலிருக் கிறதே!'' என எண்ணினுள்.



சீதை அவரைப் பார்த்து "அனு மாரே! உங்கள் சக்தி எவ்வளவு என்பது தெரிந்து விட்டது. நான் இப்போது உங்களோடு வருவது சரி யல்ல. ஒரு வேளை அப்படி வந்தா லும் நீங்கள் வேகமாகச் செல்லும் போது உங்கள் முதுகின் மீதிருந்து தவறி நான் பயத்தால் கடலில் விழுந்தாலும் விழுந்து விடுவேன். நீங்கள் என்னைக் காப்பாற்றும் முயற்சியில் இப்போது ஆபத்தில் அகப்பட்டுக் கொள்வீர்கள். மேலும் நான் உங்களோடு வர இயலாது என்பதற்கான காரணத்தை முன்பே கூறி இருக்கிறேன். எனவே நீங்கள் போய் இங்கு என்னைப் பார்த்த விவ ரத்தை என் கணவரிடம் கூறுங் கள். அவர் வந்து என்னை மீட்டுக் கொண்டு போகட்டும்'' என்ருள்.

அனுமாரும் சீதை கூறியது சரியே என எண்ணினுர். அதனுல் அவர் "தேவி! இராமருக்கு அடை யாளம் காட்டத் தங்களிடமுள்ள ஏதாவது ஒரு பொருளைக் கொடுங் கள். அதனை எடுத்துப் போய் அவ ரிடம் காட்டுகிறேன்'' என்ருர்.

சீதையும் சற்று யோசித்தாள். அவளுக்குச் சட்டெனத் தன்னிடம் உள்ள எந்தப் பொருளைக் கொடுப் பது என்று தெரியவில்லை. எனவே தனக்கு இராமருக்கும் மட்டும் தெரிந்த ஒரு நிகழ்ச்சியை அவள் அனுமாரிடம் கூறி அதனைத் தன் கணவருக்குச் சொல்லச் செய்ய லாம் என நினைத்தாள்.



சீதையும் "நான் ஒரு நிகழ்ச்சியைக் கூறுகிறேன். அதை அவருக்கு நினைவுபடுத்துங்கள். ஒருமுறை நானும் என் கணவரும் கங்கை நதிக்கரையில் இருந்தோம். அப்போது அவர் தம் தலையை என் தொடை மீது வைத்துப் படுத்து தூங்கிக் கொண்டிருந்தார். அப்போது ஒரு காகம் பறந்து வந்து என் மார்பில் குத்திக் காயப்படுத்தியது. என் ரத்தம் என் கணவர் மீது விழவே அவர் தூக்கம் கலைந்து எழுந்தார். என்னைக் காயப்படுத்திய காக்கை மீது ஒரு புல்லை எடுத்து மந்திரம் கூறி அதனை பிரம்மாஸ்திரமாக எய்தார். அந்தக் காக்கை வடிவில் வந்தவன் இந்திரனின் மகன். அவன் அந்த அஸ்திரத்திலிருந்து தப்ப எல்லோரிடமும் தஞ்சம் கேட்டான். ஆனால் யாரும் பிரம்மாஸ்திரத்திற்கு எதிராகத் தம்மால் எதுவும் செய்ய முடியாது என்று கூறிவிட்டனர். அந்தக் காக்கை திரும்பி வந்து என் கணவரிடமே சரண்புகுந்தது. அவரும் அதனை மன்னித்தார். ஆனால் பிரம்மாஸ்திரம் வீணாகாமல் எதையாவது தாக்க வேண்டுமாதலால் அதை அக்காக்கையின் வலது கண்ணைத் தாக்கச் செய்தார். இது அவருக்கும் எனக்கும் தெரிந்த ஒரு நிகழ்ச்சி இதனை நீங்கள் அவரிடம் கூறினால் நீங்கள் என்னைப் பார்த்து வந்ததாகத் தெரிந்து கொள்வார்" என்றாள்.

அனுமாரும் "தேவி! இராமர் மிக்க துயரத்தில் ஆழ்ந்திருக்கிறார். நானும் மிகவும் சிரமப்பட்டு இங்கு வந்து தங்களைக் கண்டேன். நீங்கள் கூறியபடியே அவரை இங்கே விரைவில் வரச் சொல்கிறேன். அவர் இராவணனைக் கொன்று உங்களை மீட்பார் என்பதில் சற்றும் சந்தேகமே இல்லை" என்றார்.

சீதையும் "அனுமாரே! என் கணவரிடம் என் பணிவான வணக்கங்களைக் கூறுங்கள். அவரது தம்பி இலட்சுமணன் தன் சுகங்களை எல்லாம் தியாகம் செய்து தன் அண்ணனுக்குச் சேவை புரியக் காட்டிற்கு வந்தவன். அவனையும் விசாரித்ததாகக் கூறுங்கள். இதை என் நினைவிற்கு அடையாளமாகவும் என் கணவரிடம் கொடுங்கள்" எனக்

கூறித் தன் புடவை நுனியில் கட்டி வைத்திருந்த சூடாமணியை எடுத்துக் கொடுத்தாள். அனுமார் மீண்டும் பழைய உருவை அடைந்து அதனை வாங்கிக் கொண்டு சீதையை வலம் வந்து வணங்கினர்.

சீதையும் "அனுமாரே! என் கணவர் இந்த சூடாமணியைப் பார்த்ததும் என்னையும் தசரத மன்னரையும் நினைவு கொள்வார். இனிமேல் நடக்க வேண்டியது எல்லாம் உங்களைப் பொறுத்தே உள்ளது. என் துயரத்தைப் போக்க வழி செய்யுங்கள்" என்ருள்.

அனுமாரும் "நான் போய் இராமரிடம் நீங்கள் கூறியதை எல்லாம் சொல்கிறேன். நீங்கள் கொடுத்த சூடாமணியையும் அவரிடம் சேர்த்து விடுகிறேன். நீங்கள் கொஞ்சமும் கவலைப்பட வேண்டாம். இராமர் சுக்கிரீவனின் வானரப்படைகளோடு இந்த இலங்கைக்கு வந்து போர் புரிந்து உங்களை இராவணனிடமிருந்து மீட்டுச் செல்வார். நீங்கள் கவலையேபட வேண்டாம்" என்ருர்.

பிறகு அவள் சற்று யோசித்து "அதுசரி, உங்களால் கடலைக் கடக்க முடியும். என் கணவரும் இலட்சுமணனும் வானரப் படைகளும் எப்படிக் கடலைக் கடக்க முடியும்? இங்கு வந்து அவர்கள் இராவணனேடு போர் புரிய முடியுமா?" என்று சந்தேகத்தோடு கேட்டாள்;

அனுமாரும் "தேவி! சற்றும் கவலைப்பட வேண்டாம். சுக்கிரீவனுல் எதையும் சாதிக்க முடியும். அவனுடைய படையில் எனக்குச்





சமமானவர்களும் என்னை விட அதிக பலம் உள்ளவர்களும் பலர் இருக்கிறார்கள். நானே கடல் கடந்து வந்திருக்கும் போது அவர்களால் முடியாமல் போய் விடுமா என்ன? நீங்கள் கவலைப்படாதீர்கள். எல்லாம் நல்லவிதமாகவே முடியும்'' எனக்கூறி அவளிடம் விடைபெற்றுக் கொண்டு அங்கிருந்து சென்றார்.

கொஞ்ச துரம் போனதும் அனுமார் தம் மனதில் ''சீதையைப் பார்த்தாகி விட்டது. இனி ராட்சஸர்களைப் பார்த்து அவர்களுக்கு எவ்வளவு பலம் உள்ளது எனக்காண வேண்டும். அவர்களோடு சண்டை போட என்ன வழி?'' என நினைத்தார்.

அசோக வனம் மிக அழகான பூங்காப் போலத் திகழ்ந்தது. இராவணன் அதனை மிகப்பிரியமாக அமைத்திருந்தான். அதன் செடி கொடிகளைப் பிடுங்கி எறிந்தால் ராட்சஸ வீரர்கள் தம்மைத் தாக்க வருவார்கள் என்றும் அப்போது அவர்களோடு போரிட்டு அவர்களது பலம் எவ்வளவு எனத் தெரிந்து கொள்ளலாம் என நினைத்தார்.

இவ்வாறு யோசித்து அவர் அசோகவனத்து மரம், செடி கொடிகளை வேரோடு பிடுங்கி எறியலானார். அழகாகக் கட்டப்பட்ட குளக் கரைகள் இந்த செய்கையால் இடிந்தன. அழகாக விளங்கிய அந்த வனம் சிறிது நேரத்தில் தன் அழகை இழந்து பாழாகிவிட்டது. அங்குள்ள மரங்களில் வசித்த பறவைகள் கத்திக் கொண்டு பறந்து ஓடின.

இப்படியாக அசோகவனத்தை அழித்துவிட்டு அதன். நுழைவாசலுக்கு போய் அனுமார் நின்று கொண்டு இராட்சஸர்கள் வருகையை எதிர்பார்க்கலானார். மரங்கள் முறிந்த சத்தமும் பறவைகளின் கூச்சல்களும் அங்குள்ளவர்களுக்குக் கேட்டது. அதுவரை தூங்கிக் கொண்டிருந்த ராட்சஸக் காவலாளிகளும் சீதைக்குக் காவலாக இருந்த ராட்சஸப் பெண்களும் தூக்கம் கலைந்து எழுந்தார்கள். அனுமார் மரம், செடி கொடிகளைப் பிடுங்கி எறிவதை அவர்கள் பார்த்தார்கள்.

அப்போது அனுமார் தம் உருவைப் பெரிதாக்கிக் கொண்டு நின்று கொண்டிருந்தார். ராட்சஸர்கள் தம்மைப் பார்ப்பதைக் கண்டு அவர்தம் உருவை மேலும் பெரிதாக்கலானுர். அப்போது ராட்சஸ ஸ்திரீகள் சீதையிடம் "இவன் யார்? இவனை யார் அனுப்பினுர்கள்? உண்மையைச் சொல்" என்று கேட்டார்கள்.

சீதையும் "எனக்குத் தெரியாது ராட்சஸர்கள் தான் உருமாறி வருபவர்கள். உங்களை விட எனக்கா அவர்களைப் பற்றித் தெரியும்? பாம்பின் கால் பாம்பிற்குத் தானே தெரியும். அதனுல் இவன் யாரென்பதை உங்களால் தான் கண்டு பிடிக்க முடியும். இவனைப் பார்த்தாலே எனக்கு பயமாக இருக்கிறதே" என்ருள்.

சீதை இவ்வாறு கூறியதும் ராட்சஸப் பெண்களும் பயப்பட்டார்கள். சிலர் சீதையைப் பாதுகாக்க அவளைச் சுற்றி நின்று கொண்டார்கள். வேறு சிலர் பயந்து ஓடினுர்கள். மற்றும் சிலர் அதுபற்றி இராவணனிடம் கூறச் சென்ருர்கள்.

இப்படிச் சென்றவர்கள் இராவணனைக் கண்டு "யாரோ ஒரு பயங்கரப் பேர்வழி அசோகவனத்தை அழித்துக் கொண்டிருக்கிருன். அவன் மிகுந்த பலசாலி என்று தெரிகிறது. அவன் சீதையோடு பேசியும் இருக்கிருன். சீதையிடம் அவனைப் பற்றிக் கேட்டபோது எதுவும் சொல்ல மறுக்கிருள். அவன் வானர உருவில் இருக்கிருன். அவனை இந்திரன் அனுப்பினுனே, குபேரன் அனுப்பினுனே அல்லது இராமன் அனுப்பினுனே? ஆனுல் அவன் அசோகவனத்தையே பாழாக்கி விட்டான். சீதை உட்கார்ந்திருக்கும் இடத்திலுள்ள மரத்தைத் தவிர மற்ற மரங்களை எல்லாம் அவன் வேரோடு பிடுங்கி எறிந்து விட்டான். அவனைப் பிடித்து தண்டிக்க வேண்டியது உங்கள் பொறுப்பு" என்ருர்கள்.






# ஒரு கட்டிலின் கதை

காமரூப நாட்டு மன்னன் கமல சிம்மன் தயாள குணமும் பரோப காரச் சிந்தையும் கொண்டவன். அவன் மாறுவேடத்தில் தன் நாட்டில் திரிந்து மக்களின் குறைகளை நேரில் கண்டு அறிந்து அவற்றைப் போக்கி வந்தான்.

ஒரு முறை ஒரு ஏழையைப் போல உடை அணிந்து கிளம்பிப் போய் ஒரு மலைப்பகுதியை அடைந்தான். அங்கு அவன் ஒரு பள்ளத்தாக்கில் ஒரு வழியில் போன போது அது திடீரென முடிந்துவிட்டது கண்டு திகைத்து நின்றான். அப்போது நல்ல உயரமும் உடல் கட்டும் கொண்ட ஒரு மனிதன் அங்கு வந்தான். பட்டாடை அணிந்து கைத் தடியுடன் இருந்த அவன் கண்ணிய மான கனவான் போலக் காணப் பட்டான்.

அந்தப் பெரிய மனிதன் எளிய தோற்றத்தில் இருந்த கமலசிம்மனைப் பார்த்து "யாரப்பா நீ? மிகவும் களைத்துப் போயிருக்கிறாயே. இன்றிரவு என் வீட்டில் நன்கு சாப்பிட்டு விட்டு கட்டிலில் படுத்துச் சுகமாகத் தூங்கிவிட்டு நாளைக்காலை கிளம்பிச் செல்" என்றான்.

இவ்வளவு தூரம் ஒரு பெரிய மனிதன் கூறும் போது அதைப்புறக் கணிப்பது சரியல்ல என நினைத்து கமலசிம்மன் அவனோடு செல்லச் சம்மதித்தான். இருவரும் கொஞ்ச தூரம் போனதும் திடீரெனப்பலர் வரும் சத்தம் கேட்டது. அப்போது அந்த பெரிய மனிதன் கமலசிம்மனிடம் "நீ இங்கேயே இரு. இதோ வந்து விடுகிறேன்" எனக்கூறிவிட்டு அந்தச் சத்தம் வந்த இடத்தை நோக்கிச் சென்றான்.

அது வியாபாரிகளின் ஒரு கூட்டம். அவர்களைக்கண்ட அந்தப்

-வி. பரத்-



பெரிய மனிதன் "நீங்கள் எல்லாம் இந்த இரவு வேளையில் எங்கே போகிறீர்கள்? என் கூட என் வீட்டிற்கு வந்து இ்த இரவுப் பொழுதைக் கழித்து ெட்டு நாளைக் காலையில் போகலாம்" என்றான்.

அந்தப் பெரிய மனிதன் வியாபாரிகளுடன் பேசிக் கொண்டிருந்த போது கமலசிம்மன் சற்று தூரத்தில் ஒரு கிழவன் இருப்பது கண்டு அங்கே போனான். அவன் ஒரு விறகுக் கட்டை எடுத்துத் தன் தலை மீது வைத்துக் கொள்ள முடியாமல் திணறிக் கொண்டிருந்தான். கமலசிம்மன் அவனிடம் அவனைப் பற்றிப் பரிவுடன் விசாரித்தான். பிறகு தனக்கு அன்றிரவு தங்க இடமும் உண்ண உணவும் அளிப்பதாக ஒரு பெரிய மனிதர் கூறி இருப்பதாகவும் சொன்னான்.

அதைக் கேட்ட கிழவன் பெருமூச்சு விட்டவாறே "ஐயோ! நீங்களும் அவன் மாயையில் அகப்பட்டுக் கொண்டு விட்டீர்களா? அவன் ஒன்றும் பெரிய மனிதனே இல்லை. ராட்சஸனிலும் கொடியவன். அவன் உங்களைத் தன் மாய வலையில் சிக்க வைக்க முயல்கிறான். அவன் உங்களைத் தன் மாயக் கட்டிலில் படுக்கச் சொல்லப் போகிறான்" என்றான்.

அது கேட்டு கமலசிம்மன் ஆச்சரியப்பட்டு "அவன் பெரிய மனிதன் இல்லையா? அவனைப் பற்றி இன்னும் விவரமாகக் கூறுங்கள்" என்று கேட்கவே அக்கிழவனும் கூறலானான்.

"ஐயா! இவன் ராட்சஸ குணம் படைத்தவன். மிகவும் கொடியவன். இவன் பெயர் வக்கிர கேது. இவன் இப்போது தங்கம் செய்வதற்கான மந்திரத்தை அறிந்து கொள்ள முயன்று கொண்டிருக்கிறான். இதற்காக ராட்சஸ தேவியை வழிபட்டு வருகிறான். அந்த தேவி அவனிடம்" "வக்கிரா! உன் கோரிக்கை நிறைவேற வேண்டுமானல் அதோ அந்தக் கட்டிலை எடுத்துப் போய் அதன் நீளத்திற்குச் சரியாக உள்ள ஒருவனை எனக்கு பலியிட வேண்டும்" என்று கூறி மறைந்தாள்.

வக்கிர கேது அந்தக் கட்டிலைத்

தன் இருப்பிடத்திற்குக் கொண்டு வந்தான். இங்கு ஒரு அழகிய மாளிகையைக் கட்டினன். இங்கு காத்திருந்து இவ்வழியே வருபவர்களைத் தன் வீட்டிற்கு அழைத்து போய் கட்டிலில் படுக்க வைப்பான். அப்படிப் படுப்பவர்கள் அந்தக் கட்டிலின் நீளத்தை விட அதிகமாக இருந்தால் அவர்களது கால்களை வெட்டி விடுவான். நீளம் குறைவாக இருந்தாலோ அவர்களது உடலை இழுத்துச் சித்திரவதை செய்வான். இப்படிப் பட்ட கொடுமைகளால் இங்கு வந்தவர்கள் எல்லாம் இறந்து போனர்கள். ஆனல் அந்தக் கட்டிலின் நீளத்திற்குச் சரியாக இருந்தவன் நான் ஒருவனே!''

இவ்வாறு கூறியதும் கமல சிம்மன் கிழவனிடம் ''அப்படியானல் அந்த வக்கிரகேது உங்களை ஏன் அந்த தேவிக்கு பலியிடவில்லை?'' என்று கேட்டான். அதற்கு அக்கிழவனும் ''நானும் உங்களைப் போல இங்கு வந்த பயணிதான். என்னை இந்த வக்கிரகேது தன் வார்த்தைகளால் கவர்ந்து தன் வீட்டிற்கு அழைத்துப் போனன். எனக்கு நல்ல உணவு அளித்தான். பிறகு அந்த மாயக் கட்டிலைப் காட்டி அதில் படுத்துத் தூங்கும் படிச் சொல்லி விட்டுப் போய் விட்டான்'' என்று கூறி மேலும் தொடர்ந்தான்:



''நானும் அந்தக் கட்டிலில் படுத்துக் கொண்டேன். நான் அதன் நீளத்தை விட ஒரு அடி அதிகமாக இருந்தேன். எனக்குத் தூக்கம் வரவில்லை. எனவே தலையணையை எடுத்து எதிர்ப்பக்கம் போட்டுப் படுத்தேன். என்ன ஆச்சரியம். நான் கட்டிலின் நீளத்திற்குச் சரியாக இருந்தேன். அப்போதுதான் அந்த மாயக்கட்டிலின் மர்மம் என்ன என்பது தெரிந்தது. எனக்குத் தூக்கம் வராததால் கண்களை மூடிக்கொண்டுப் படுத்திருந்தேன்.

சற்று நேரத்திற்குப் பிறகு வக்கிரகேது வந்தான். கட்டிலில் படுத்திருந்த என்னைப் பார்த்தான். நான் அந்தக் கட்டிலின் நீளத்திற்



குச் சரியாக இருப்பது கண்டு அவன் மகிழ்ந்து போனுன். அன்று முதல் எனக்கு அவன் சிறப்பு மரியாதை செய்யலானுன். நல்ல உணவை அளித்தான். பிறகு என்னைப் பலி யிட ஒரு நல்ல நாளையும் குறித் தான். அந்தநாள் எது என்று அங் கிருந்த பணியாட்களிடமிருந்து முன் கூட்டியே நான் தெரிந்து கொண்டு விட்டேன்.

பலிகொடுப்பதற்கு முதல்நா ளிரவு வக்கிரகேது வந்தான். நான் கட்டிலில் படுத்திருப்பதையும் என் நீளம் அதன் நீளத்திற்குச் சரியாக இருப்பதை மீண்டும் சரிபார்க்க லானுன். அப்போது நான் கால் மாட்டில் தலை வைக்காமல் தலைமாட் டில் தலை வைத்துப் படுத்திருந் தேன். அதனுல் என் கால்கள் கட்டிலிலிருந்து ஒரு அடி நீண்டு இருந்தன. இதைக் கண்ட வக்கிர கேது கட்டிலின் நீளத்திற்குச் சரி யாக இருந்த நான் எப்படி அதை விட அதிக நீளமானேன் என்று நினைத்து ஆச்சரியப்பட்டான்.

அவன் அந்தக் கட்டிலின் மர் மத்தை அறிந்திருக்கவில்லை. அந்த தேவி அந்தக் கட்டிலை எடுத்துப்போ என்று வக்கிரகேதுவிடம் கூறிய தும் அவனும் அக்கட்டிலைப் பற் றிய விவரம் எதுவும் தெரிந்து கொள்ளாமல் எடுத்து வந்து விட் டான். தேவியும் அது பற்றி அவ னிடம் எதுவும் கூறவில்லை. அப் போது அவன் அக்கட்டிலுக்கு ஏதோ மாயசக்தி இருக்கிறது என்றும் அதை நான் கண்டுபிடித்து விட் டேன் என்றும் ஊகித்து விட்டான். அதனுல் அந்த ரகசியத்தைக் கூறு மாறு என்னைத் துன்புறுத்தலானுன். நானே எனக்கு எதுவும் தெரியாது என்று சாதித்தேன். அவனுல் என்ன முயன்றும் என்னிடமிருந்து எதை யும் அறிய முடியவில்லை. அதனுல் வக்கிரகேது ஆத்திரம் கொண்டு என்னைத் தன் அடிமையாக ஆக்கிக் கொண்டு விட்டான். அவனுக்கு நான் எல்லா வேலைகளையும் செய்ய வேண்டும். துணி துவைக்க வேண் டும். வீட்டைப் பெருக்கி சுத்தமாக வைக்க வேண்டும். காட்டிற்குப் போய் விறகு வெட்டி எடுத்து வர

வேண்டும். இன்றுவரை அவனுக்கு அந்தக் கட்டிலின் ரகசியத்தைக் கூறும்படி என்னை வற்புறுத்தி வருகிறுன். ஆனுல் நானே அசைந்து கொடுக்காமல் இருந்தது வருகிறேன். இதுவரை அவனுக்கும் அந்தக் கட்டிலின் நீளத்திற்குச் சரியாக உள்ள மனிதன் வேறு யாரும் கிடைக்கவில்லை.

இவ்வாறு அந்தக் கிழவன் கூறி முடித்ததும் கமலசிம்மன் யோசிக்கலாஞன். அப்போது வக்கிரகேது வியாபாரிகளை அழைத்துக் கொண்டு கமலசிம்மன் இருந்த இடத்திற்கு வந்து சேர்ந்தான். அதற்குள் அக் கிழவன் கமலசிம்மனின் காதில் ரகசியமாக ஏதோ சொன்ஞன். அவனும் அப்படியே செய்வதாக கூறிஞன்.

அன்று வக்கிரகேதுவுக்குக் கிடைத்தவர்களில் எல்லோரையும் விடக் கமலசிம்மனே மிக அழகாக இருந்தான். அதஞல் வக்கிரகேது அவனுக்கு ஆசார உபசாரங்களை மிகவும் செய்தான். வக்கிரகேது அவனை அந்த மாயக் கட்டிலில் படுக்கச் சொன்ஞன். கமலசிம்மனே தனக்குக் கட்டிலில் படுத்துப் பழக்கம் இல்லை எனக் கூறித் தட்டுத் தடுமாறுபவன் போல நடித்தான். அவன் வேண்டுமென்றே கட்டிலின் கால்மாட்டில் தன் தலையை வைத்துப் படுத்தான்.

வக்கிரகேது சற்று நேரம் கழித்து



வந்து கட்டிலில் படுத்திருந்த கமலசிம்மனைப் பார்த்தான். கட்டிலின் நீளமும் கமலநாதனின் நீளமும் சரியாக இருப்பது கண்டு அவன் மகிழ்ந்து போஞன். அதஞல் அவன் தான் அழைத்து வந்த வியாபாரிகளை மறந்தேபோய் விட்டான். அவன் கமலசிம்மனிடம் பேசி அவனை மேலும் சில நாட்கள் அங்கே தங்குமாறு வேண்டிக் கொண்டான்.

வக்கிரகேதுவின் ஆனந்தத்திற்கு அளவே இல்லை. தேவிக்குப் பலியிட சரியான ஒரு மனிதன் கிடைத்துவிட்டான் என்றும் இனித் தங்கம் செய்யும் இரகசியம் தனக்குத் தெரிந்து விடும் என நினைத்து அவன் பூரித்துப் போஞன். கமல

சிம்மனும் அவனது வேண்டுகோளை ஏற்க முதலில் கொஞ்சம் 'பிகு' செய்துவிட்டுப் பிறகு ஏற்றான்.

கமலசிம்மனும் கிழவனும் அடிக்கடிச் சந்தித்துப் பேசி ஒரு திட்டம் தீட்டினார்கள். அதன்படி ஒருநாள் வக்கிரகேதுவின் உணவில் மயக்க மருந்தைக் கலந்து உண்ணும்படி கமலசிம்மன் செய்தான். அவன் அதனைச் சாப்பிட்டு தன் உணர்வு இழந்ததும் அவனைத் தூக்கிக் கட்டிலின் கால் மாட்டில் அவனது தலை இருக்குமாறு படுக்க வைத்தான். அப்போது வக்கிர கேது கட்டிலின் நீளத்திற்குச் சரியாக ஆகிவிட்டான்.

அப்போது கமலசிம்மனும் கிழவனும் சேர்ந்து கட்டிலோடு வக்கிர கேதுவைத் தூக்கிக் கொண்டு போய் தேவியின் முன் வைத்தார்கள். அவனை அவர்கள் தேவிக்கு பலி இடப்போகும் போது தேவி அவர்கள் முன் தோன்றி "இவன் என் பக்தன் இவனை பலியிட வேண்டாம். இவனை ஒன்றும் செய்யாமல் விட்டுவிடுங்கள். இவனுக்கு உள்ள அபூர்வசக்திகளைப் போக்கி சாதாரண மனிதனாக ஆக்கி விடுகிறேன். பிழைத்துப் போகட்டும்" என்றாள். தங்கம் செய்யும் மந்திரத்தை தேவி கமல சிம்மனுக்கு உபதேசித்து விட்டு மறைந்தாள்.

கமலசிம்மன் கிழவனை அடிமைத் தனத்திலிருந்து விடுதலை செய்து தன்னோடு அரண்மனைக்கு அழைத்துச் சென்றான். வக்கிரகேதுவின் மாளிகையைப் புதுப்பித்து அங்கு வரும் பயணிகள் தங்கி இளைப்பாறி உணவு உண்டு செல்லத்தக்க ஏற்பாடுகளையும் செய்தான்.

பாவம்! கொடியவன் வக்கிர கேது சாதாரண மனிதன் போலத் திரிய வேண்டியதாயிற்று. கமல சிம்மன்தான் கற்ற மந்திரத்தால் தங்கம் செய்து தன் நாட்டு மக்களின் நல்வாழ்விற்கு அதனைப் பயன் படுத்தி வரலானான்.





# மந்திரம் கற்காதே!

ஒரு ஊரில் நாராயணன் என்ற பிராம்மணன் இருந்தான். அவனுக்கு மனிதனைப் புலியாக்கும் மந்திரம் கற்க வேண்டுமென்ற ஆசை ஏற்பட்டது. அதற்காக அவன் பல பண்டிதர்களையும் மந்திரவாதிகளை அணுகியும் பலன் இல்லை. அவர்கள் எல்லோருமே தமக்கு அத்தகைய மந்திரம் தெரியாது என்றே கூறி விட்டார்கள்.

ஒருநாள் அவ்வூருக்கு ஒரு யோகி வந்தார். அவர் சக்தி வாய்ந்தவர் என்றும் பல அரிய மந்திர்ங்களைக் கற்றவர் எனத் தெரிந்து கொண்ட நாராயணன் அவரைத் தன் வீட்டிற்கு அழைத்துப் போய் பாதபூஜை செய்து உபசரித்தான். அவரும் மகிழ்ந்து, "அப்பனே! உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார். அவனும் "மகாத்மாவே! எனக்கு மனிதனைப் புலியாக மாற்றும் மந்திரத்தை உபதேசிக்க வேண்டும்" என்றார்.

யோகியோ "இது ஆபத்தானது. அதனால்தான் இந்த மந்திரத்தை யாருக்கும் நான் உபதேசிக்கவில்லை. நீயோ என்னை உபசரித்து என் மனம் குளிரச் செய்து என்னிடம் வரம் கேட்டாய். இந்த நிலையில் நீ கேட்பதை நான் கொடுத்தேயாக வேண்டும். ஆனால் ஒரு நிபந்தனையின் பேரில்தான் உபதேசிப்பேன். நீ வன்முறைக்காக இந்த மந்திரத்தைப் பயன்படுத்தக்கூடாது. ஏதோ சற்று நேரம் பொழுதுபோக நீ சந்தோஷப்படவே இதனை உபயோகிக்க வேண்டும்" என்றார்.

நாராயணனும் அவ்விதமே செய்வதாகக் கூறவே அவர் இரண்டு மந்திரங்களை உபதேசித்து இருவகை அட்சதைகளைக் கொடுத்து "நீ யாரை வேண்டுமானாலும் புலியாக மாற்றி

-காரை குருமூர்த்தி-



விட முடியாது. எந்த மனிதன் புலியாக விரும்புகிருனே அவனைத் தான் மாற்ற முடியும். முதலாவது மந்திரத்தைக் கூறி நீ இந்த சிவப்பு நிற அட்சதையை அவன் தலை மீது போட்டால் அவன் உடனே புலியாக மாறி விடுவான். அந்தப் புலியின் முகத்தில் பெரிய மச்சம் இருக்கும் புலியாக மாறியவனுக்கு அறிவு இராது. அதனால் எதுவும் நினைவில் இராது. நீ அதனைக் கண்டுகளித்த பின் இரண்டாவது மந்திரத்தைக் கூறி மஞ்சள் நிற அட்சதையை அந்தப் புலியின் முகத்தின் மீதுள்ள மச்சத்தின் மீது போட்டால் அது மீண்டும் மனிதனாகி விடும்" என்று கூறி விட்டுச் சென்ருர்.

நாராயணன் அவர் போனதும் தன் மனைவி லட்சுமியிடம் தான் கற்ற மந்திரங்கள் பற்றிக் கூறினுன். அவளும் "அப்படியா! எனக்கு ஒரு புலியைப் பார்க்க வேண்டும் என்று ஆசையாக இருக்கிறது" என்ருள். நாராயணனே "அதைத்தான் செய்ய முடியாது. ஏனென்ருல் யாரையும் நான் நினைத்த மாத்திரத்தில் புலி யாக மாற்றிவிட முடியாது. யாரை யாவது புலியாக மாறச் சம்மதித் தாலே இந்த மந்திரம் பலிக்கும். யாரும் புலியாக மாற விரும்ப மாட் டார்கள். எனவே உனக்கு இரு மந் திரங்களைக் கூறுகிறேன். நீ என்னைப் புலியாக மாற்று. சற்று நேரத்திற் குப் பின் என்னை மறுபடியும் மனித னுக மாற்றி விடு" என்ருன்.

லட்சுமியும் அந்த மந்திரங்களைக் கேட்டுக் கொண்டு முதலாவது மந் திரத்தைக் கூறி சிவப்பு நிற அட்சதை யை அவன் தலை மீது போட்டாள். மறுநிமிடமே நாராயணன் புலியாக மாறி பயங்கரமாக உறுமினுன். அதைக் கேட்டு லட்சுமி பயந்து அங்கும் இங்கும் ஓடினுள். புலியோ அவளைத் துரத்தலாயிற்று. அதைக் கண்ட அவள் ஓடிப்போய் வாசல் கதவைத் திறந்துவிட்டு முன் அறை யில் இருந்த பரண்மீது ஏறி உட் கார்ந்து கொண்டாள். புலியோ சற்று நேரம் வீட்டில் திரிந்து விட்டு வெளியே ஓடி ஒரு காட்டிற் குள் சென்று மறைந்தது. பயம் தெளிந்த லட்சுமி புலிபோய் விட்

டது கண்டு திகைத்துப் போனுள்.

இப்படியாகச் சில நாட்கள் கழிந்தன. ஒருநாள் லட்சுமியின் தம்பி அவள் வீட்டிற்கு வரவே அவள் அவனிடம் "என் கணவர் புலி மந்திரம் கற்று வந்தார், நான் புலியைப் பார்க்க ஆசைப்பட்டேன். அவர் மந்திரம் பலிக்கும் விதத்தைக்கூறி அம்மந்திரத்தை எனக்கு உபதேசித்தார். நான் அவரைப் புலியாக மாற்றினேன். அவர் காட்டிற்குள் ஓடிவிட்டார்" என்று நடந்ததைக் கூறினுள். இருவரும் அந்தப் புலியைத் தேடக் காட்டிற்குள் சென்ருர்கள்.

இதேசமயம் மக்கள் புகார் கொடுத்ததன் பேரில் அந்தப் புலியைக் கொல்ல காட்டிற்கு அந்நாட்டு மன்னன் வந்தான். அவன் அங்கும் இங்கும் அலேந்து பார்த்து விட்டு ஒரு மரத்தடியே வந்து இளேப்பாறலானுன். அப்போது திடீரென ஒரு புலி பாய்ந்து வந்து அவன் கழுத்தைப் பிடித்தது.

தான் இறக்கப் போவது உறுதி என நினேத்த மன்னன் அந்தப் புலியைப் பிடித்துத் தள்ள முயன்ற போது அந்தப் புலி திடீரென ஒரு மனிதனுக மாறியதையும் மரத்தின் மீதிருந்து பெண் ஒருத்தி கீழே குதித்ததையும் கண்டு அவன் ஆச்சரியப்பட்டான். அப்பெண்ணே வன தேவதை என நினேத்து மன்னன் வணங்கி "தாயே! தக்க சமயத்தில் வந்து என்னேக் காப்பாற்றினுய் நீ இந்தக் காட்டின் வனதேவதை தானே!" என்று கூறிப் பணிவுடன் நின்ருன்.



அப்போது அந்தப் பெண் "அரசே! நான் வனதேவதை அல்ல. சாதாரணப் பெண். லட்சுமி. இவர் என் கணவர். இவர் புலி மந்திரம் கற்றதால் இதெல்லாம் நடந்தது" எனக் கூறி நடந்ததை எல்லாம் விவரமாகக் கூறினுள். நாராயணனும் மன்னனின் கால்களில் விழுந்தான். பிறகு அவன் லட்சுமியிடம் "நல்ல வேளை. நீ என்னைத் தேடிக் கண்டு பிடித்து மந்திரத்தைக் கூறி மஞ்சள் அட்சதையை என் முகத்தில் மச்சத்தின் மீது போட்டாய். அதனுல் நான் உன்னை மறுபடியும் அடைந்தேன்" என்றுன்.

அப்போது நாராயணன் தான் புலி மந்திரம் கற்றதிலிருந்து அதுவரை நடந்ததை விவரமாகக் கூறினுன். அவனது மனைவி "என் ஆசையால் இவர் புலியாக வேண்டி வந்தது" என்றுள்.

மன்னனும் தன்னைக் காப்பாற்றியதற்காக லட்சுமியைப் பாராட்டியதோடு நாராயணனைத் தன் தர்பாரில் ஒரு உயர் உத்தியோகத்தில் நியமித்தான். அப்போது முதல் நாராயணன் மறுபடியும் புலி மந்திரத்தை உபயோகிக்கவே இல்லை. அவன் தனக்குக் கிடைத்த உத்தியோகத்தோடு திருப்தி அடைந்து தன் மனைவியுடன் சுகமாக வாழ்ந்து வந்தான்.

கொஞ்ச நாட்களுக்குப் பின் நாராயணனைக் காண அவனுக்குப் புலி மந்திரத்தை உபதேசித்த யோகி வந்தார். அவர் நாராயணன் இனிமேல் புலி மந்திரத்தை உபயோகிக்கப் போவதில்லை எனக் கூறியது கேட்டு மகிழ்ந்து "மந்திரங்களை உலக நன்மைக்கே அல்லாது பொழுது போக்கவும் உலகை அழிக்கவும் கற்கக் கூடாது என்பதை நீ தெரிந்து கொண்டாய். அதுபோதும். உன் போல மற்றவர்களும் இதை உணரட்டும்" எனக்கூறி அவனையும் லட்சுமியையும் ஆசீர்வதித்து விட்டுச் சென்றுர்.



## ஆமையின் கண்ணீர்



பச்சை நிற ஆமை நிலத்தில் செல்ல மிகவும் சிரமப்படும். அதற்குக் காரணம் அதன் பருமனே. அது களைத்துப் போனது போல அதன் கண்களிலிருந்து நீர் வடிந்து கொண்டே இருக்கும். ஆனால் உண்மையில் அது கடல் நீர். ஆமை கடலில் இருந்தபோது குடித்த உப்பு நீரை இப்படி வெளியேற்றுகிறது.

## அபாயகர மீன்

மீன்களின் ஸ்டிங்ரே என்பதுதான் மனிதனை மிகவும் காயப்படுத்துவது. ஆழமில்லாத பகுதிகளில் மணலில் இது மறைந்திருக்கும். அப்பகுதியில் யாராவது காலை வைத்தால் இது சவுக்கு போன்ற தன் வாலை உயர்த்தி அடிக்கும். முட்கள் போன்ற வாலின் நுனியிலிருந்து விஷம் வெளிப்பட்டு அம்மனிதனுக்கு மிகுந்த வலியையோ மரணத்தையோ ஏற்படுத்தும்.



## நீந்தத் தெரியாது!

மனிதக் குரங்கிற்கு நீந்தத் தெரியாது.



TALLEST

1. What was the height of the tallest man in the world?



2. Move three buttons and make the triangle face the other way.

3. What is the distance between the Earth and the Moon?



4. Name the family of Angles.

FREE GIFT for the first 1000 all correct answers.

OMEGA S·O·N·Y




Hurry, your answers must reach us before 31st August, 1991.




# GEOMETRY MADE FUN

**Please attach this advertisement with your answers and mail them to:**
**Allied Instruments Pvt. Ltd.** 30 CD, Govt. Industrial Estate, Kandivli (W), Bombay 400 067.

3 Brothers/OS/2691

## போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 50

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1991 அக்டோபர் மாத இதழில் வெளியிடப்படும்**



G. Srinivasamurthy



J. Sarojini

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஆகஸ்டு 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும். ★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 50/—பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க் கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

---

### ஜூன் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : அகத்தின் அழகை ரசித்தல்

இரண்டாவது போட்டோ : புறத்தின் அழகை ரசித்தல்

பரிசு பெற்றவர் : எஸ். ஜெயஸ்ரீ, கல்கத்தா-26

பரிசுத் தொகை ரூ. 50/-ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பி வைக்கப்படும்.

---


## அம்புலிமாமா

இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ. 48-00

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை-600026

Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

# PAINT YOUR OWN DREAMS!

AND WIN A FREE TRIP TO THE USSR!

**A special contest for JUNIOR QUEST subscribers!**

Hi kids! What's your DREAM WORLD like? Is it a world where stormy seas turn into milk and honey? And dark clouds become beautiful butterflies?

Well, here's your chance to say why friends, animals, flowers, laughter and other beautiful things make this world a great place to live in!

Just make a colourful picture of your own DREAM WORLD. Use paints, colour pencils, crayons or felt pens. ( Maximum paper size 20 cm. x 45 cm.) On another paper complete the following : " The world would be a better place if ................". (Less than 50 words, in English only).

Remember, even the most impossible dream could be a winner. And some day, perhaps, it could even come true!

**Last date - September 30, 1991**

Mail your entries to:
DREAM WORLD CONTEST
C/O Junior Quest, Chandamama Building,
Vadapalani, Madras 600 026.

**DREAM WORLD PRIZES**

* One free trip to the USSR and back
* 50 Gift cheques of Rs 100 each
* Extra-special JQ T-shirts




C.O.N.T.E.S.T

JUNIOR QUEST

*Where finding out is fun*

RULES • Contest open to all current Junior Quest subscribers, and to all those who subscribe before September 30, 1991. • All entries must be accompanied by the special Dream World Contest coupon, available in the July, August and September 1991 issues of Junior Quest.Along with your current subscription number or a subscription coupon. • In case of a tie, a lucky draw decides who wins the free trip to the USSR. • The decision of the judges will be final and binding • We will not be responsible for entries lost or damaged. Incomplete entries will be disqualified. • Entries become the property of the Chandamama Vijaya Combines Publications Division, with the right to publish any of the winning entries. • The results will be published in a future issue of Junior Quest. • The winner is responsible for all passport and Reserve Bank formalities.

HTA 7932




தேங்காய்
இனிமை
மிட்டாய்க்குள்
கடித்தால் இன்பம்
வாய்க்குள்




nutrine
COOKIES





குழந்தைகள்
கோலாகலத்துடன் சுவுவர்
கோகாநாக குக்கீஸ்

